உ

சிவமயம்.

# திருப்பரங்கிரிப்புராணம்.

ஸ்ரீ-நிரம்பவழகியதேசிகரால்

மொழிபெயர்த்தருளியது.

இஃது

திருவாவடுதுறை ஆதீனத்துமஹாவித்துவான்

மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை யவர்கள்

மாணாக்கரு ளொருவராகிய

திருவானைக்கா

குமாரசாமிபிள்ளை யவர்களாலும்

திருவுறந்தையிலிருக்கும்-கல்லூர்

மதுரநாயக முதலியா ரவர்களாலும்

பார்வையிடப்பட்டு,

இலா-பருத்திக்கால்மிராசு

வேங்கடாசலமுதலியா ரவர்கள்

கோவிலடி-கைலையப்ப முதலியாரவர்கள்

ஷியூர்-கந்தசாமிமுதலியா ரவர்கள்

இம்மூவர்களின் வேண்டுகோளால்

திருப்பரங்குன்றம்,

அருணாசலசரணர்

குமாரர்

நாராயணசரணரால்

காரைக்காலியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரமாதிஸூ - தைமீ.



உ

திருச்சிற்றம்பலம்.

# தேவாரத் திருப்பதிகம்.

## திருஞானசம்பந்தசுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது.

### திருப்பரங்குன்றம்—பண்—குறிஞ்சி.

நீடலர்சோதிவெண்பிறையோடுநிறைகொன்றைச்
சூடலனந்திச்சுடரெரியேந்திச்சுடுகானி
லாடலனஞ்சொலணியிழையாளையொருபாகம்
பாடலன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. (௧)

அங்கமோராறுமருமறைநான்குமருள்செய்து
பொங்குவெண்ணூலும்பொடியணிமார்பிற்பொலிவித்துத்
திங்களும்பாம்புந்திகழ்சடைவைத்தோர்தேன்மொழி
பங்கினன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. (௨)

நீரிடங்கொண்டநிமிர்சடைதன்மேனிறைகொன்றைச்
சீரிடங்கொண்டவெம்மிறைபோலுஞ்செய்தாய
வோரிடம்புள்ளேயுமையொருபாகமுடனாகிப்
பாரிடம்பாடவினிதுறைகோயில்பரங்குன்றே. (௩)

வளர்பூங்கோங்கமாதவியோடுமல்லிகைக்
குளிர்பூஞ்சாரல்வண்டறைசோலைப்பரங்குன்றந்
தளிர்போன்மேனித்தையனல்லாளோடொருபாகம்
களிர்பூங்கொன்றைசூடினன்மேயநகர்தானே. (௪)

பொன்னியல்கொன்றைப்பொறிகிளர்நாகம்புரிசடைத்
துன்னியசோதியாகியவீசன்றொன்மறை
பன்னியபாடலாடலன்மேயபரங்குன்றை
யுன்னியசிந்தையுடையவர்க்கில்லையுறுநோயே. (௫)

கடைநெடுமாடக்கடியரண்மூன்றுங்கனன்மூழ்கத்
தொடைநவில்கின்றவில்லினனந்திச்சுடுகானிற்

புடைநவில்பூதம்பாடநின்றாடும்பொருகூலப்
படைநவில்வான்றனன்னகர்போலும்பரங்குன்றே. (௬)
அயிலுடைவேலோரனல்புல்குகையினம்பொன்று
லெயில்படவெய்தவெம்மிறைமேயவிடம்போலு
மயில்பெடைபுல்கிமாநடமாடும்வளர்சோலைப்
பயில்பெடைவண்டுபாடலறாதபரங்குன்றே. (௭)
மைத்தகுமேனிவாளரக்கன்றன்மகுடங்கள்
பத்தினதிண்டோளிருபதுஞ்செற்றான்பரங்குன்றைச்
சித்தமதொன்றிச்செய்கழலுன்னிச்சிவனென்று
நித்தலுமேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (௮)
மூந்தியவையந்தாவியமாலுமொய்யொளி
யுந்தியில்வந்திங்கருமறையீந்தவுரவோனுஞ்
சிந்தையினாலுந்தெரிவரிதாகித்திகழ்சோதிப்
பந்தியலுங்கைமங்கையோர்பங்கன்பரங்குன்றே. (௯)
குண்டாய்முற்றுந்திரிவார்கூறைமெய்போர்த்து
மிண்டாய்மிண்டர்பேசியபேச்சுமெய்யல்ல
பண்டானீழன்மேவியவீசன்பரங்குன்றைத்
தொண்டாயேத்தத்தொல்வினைநம்மேனில்லாவே. (௧0)
தடமலிபொய்கைச்சண்பைமன்ஞானசம்பந்தன்
படமலிநாகமரைக்கசைத்தான்றன்பரங்குன்றைத்
தொடைமலிபாடல்பத்தும்வல்லார்தந்துயர்போகி
விடமலிகண்டனருள்பெறுதன்மைமிக்கோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திசுவாமிகளாலருளிச்செய்தது.

—(*)—

திருப்பரங்குன்றம்— பண்—இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டருமைக்கொ
ண்டுழல்கின்றதொர்கொல்லைச்சில்லைச், சேத்திட்டுக்குத்தி
த்தெருவேதிரியுஞ்சிலபூதமுநீருந்திசைதிசையன, சோத்திட்

மின்னோர்பலருந்தொழநும்மனைக்கோவணத்தோடொரு தோல்புடைசூழ்க், தாத்திட்டதும்பாம்புகைக்கொண்டதும் பாம்படிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (௧)

முண்டந்தரித்தீர்முதுகாடுறைவீர்முழுநீறுமெய்பூசுதிர்மூக்க ப்பாம்பைக், கண்டத்திலுந்தோளிலுங்கட்டிவைத்தீர்கடலைக் கடைந்திட்டதோர்நஞ்சையுண்டீர், பிண்டஞ்சுமந்தும்மொடு ங்கூடமாட்டோம்பெரியாரொடுநட்பினிதென்றிருந்து, மண் டங்கடந்தப்புறத்தும்மிருந்தீரடிகேளுமக்காட்செயவஞ்சு [மே. (௨)

மூடாயமுசலகன்மூக்கப்பாம்புமுடைநாறியவெண்டலைமொ ய்த்தபல்பேய், பாடாவருபூதங்கள்பாய்புலித்தோல்பரிசொ ன்றறியாதனபாரிடங்க, ளோடார்மலர்க்கொன்றையுந்துன் னொருக்குந்துணைமாமணிநாகமனைக்கசைத்தோன், றூடாத னவேசெய்திரெம்பெருமானடிகேளுமக்காட்செயவஞ்சது [மே. (௩)

மஞ்சுண்டமாலைமதிசூடுசென்னிமலையான்மடந்தைமணவாள நம்பி, பஞ்சுண்டவல்குற்பணைமென்முலையாளொடுநீருமொ ன்றாயிருத்தல்லொழியீர், நஞ்சுண்டுதேவர்க்கமுதங்கொடுத்த நலமொன்றறியோமுங்கைநாகமதற், கஞ்சுண்டுபடமதுபோ கவிடீரடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (௪)

பொல்லாப்புறங்காட்டகத்தாட்டொழியீர்புலால்வாயனபே யொடுபூச்சொழியீ, ரெல்லாமறிவீரிதுவேயறியீரென்றிரங்கு வேனெல்லியுநன்பகலுங், கல்லானிழற்கீழொருநாள்கண்ட் துங்கடம்பூர்க்காக்கோயின்முன்கண்டது, மல்லால்விரகொ ன்றிலமெம்பெருமானடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே! (௫)

தென்னத்தென்னத்தெத்தெனவென்றுபாடிச்சிலபூதமுநீரு ந்திசைதிசையன, பன்னான்மறைபாடுதிர்பாசூருளீர்பட்டம்பக் கங்கொட்டுந்திருவொற்றியூரீர். பண்ணார்மொழியாளையோர் பங்குடையீர்படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியீ, ரண் ணாமலையெனென்றீராரூருளீரடியோமுமக்காட்செயவஞ்ச [துமே. (௬)

சிங்கத்துரிமூடுதிர்தேவர்கணந்தொழநிற்றீர்பெற்றமூர்ந்தேறி
டுதிர், பங்கம்பலபேசிடப்பாடுந்தொண்டர்தம்மைப்பற்றிக்
கொண்டாண்டுவிடவுங்கில்லீர், கங்கைச்சடையீருங்கருத்த
றியோங்கண்ணுமூன்றுடையீர்கண்ணேயாயிருந்தா, லங்கத்
துறுநோய்களைந்தாளகில்லீரடியோமுமக்காட்செயவஞ்சுது
[மே. (௭)

பிணிவண்ணத்தவல்வினைதீர்த்தருளீர்பெருங்காட்டகத்துப்
பெரும்பேயுநீரும், துணிவண்ணத்தின்மேலுமோர்தோலுடுத்
துச்சுற்றுநாகத்தராய்ச்சுண்ணநீறுபூசி, மணிவண்ணத்தின்
மேலுமோர்வண்ணத்தராய்மற்றுமற்றும்பலபலவண்ணத்தரா
யணிவண்ணத்தராய்நிற்றீரெம்பெருமானடிகேளுமக்காட்செ
யவஞ்சுதுமே. (௮)

கோளாளியகுஞ்சரங்கோளிழைத்தீர்மலையின்றலையல்லது
கோயில்கொள்ளீர், வேளாளியகாமனைவெந்தழியவிழித்தீர
துவன்றியும்வேய்புரையுந், தோளாளுமைநங்கையோர்பங்கு
டையீருடுகூறையுஞ்சோறுந்தந்தாளகில்லீ, ராளாளியவேகி
ற்றீரெம்பெருமானடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (௯)

பாரோடுவிண்ணும்பகலுமாகிப்பனிமால்வரையாகிப்பரவை
யாகி, நீரோடுதீயுநெடுங்காற்றுமாகிநெடுவெள்ளிடையாகிநில
னுமாகித், தேரோடவரையெடுத்தவரக்கன்சிரம்பத்திறுத்தீ
ரும்செய்கையெல்லா, மாரோடுங்கூடாவடிகேளிதுவென்ன
டியோமுமக்காட்செயவஞ்சுதுமே. (௧௦)

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென்றமரர்பெருமானையாரூ
ரனஞ்சி, முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னேமொழிந்தா
றுமோர்நான்குமோரொன்றினையும், படியாயிவைகற்றுவல்
லவடியார்பரங்குன்றமேயபரமன்னடிக்கே, குடியாகிவானோ
ர்க்குமோர்கோவுமாகிக்குலவேந்தராய்விண்முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

———





# சிறப்புப்பாயிரம்.



கும்பகோணம்
புரோவின்சியால் கல்லீஜ்தமிழ்ப்புலவர்
தியாகராச செட்டியாரவர்கள
மாணாக்கருளொருவராகிய
ஒன்பத்துவேலி

## நா-மாதவிவனம்பிள்ளையவர்களா லியற்றிய

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீரிருக்குமுயர்வேதச்சிரத்திருக்கு மருட்பெருமான் றேவிகைக்கொள், பேரிருக்குமெழிற்செங்கோல் பெற்றுளப்பெற்றநமைப்பிறங்குமற்றை, யேரிருக்குநாடொக்குங்கொல்லோவென்றெந்நாடுமேங்கவோங்கி, வாரிருக்கும்வளநிறைவை யத்திருந்துசெருக்குமிகுவழுதிநாட்டில். (க)

மாணமருட்டிக்கானிற்றுரந்தவரிபடர்ந்த செங்கண்வல்லிதெய்வ, யானைதனைமறைமொழியுநிறைவிதியின்வழிமன்ற லாற்றிவிண்ணுள், கோனைமுதலமரரின்பி னமரநெடுவேற்படைகைக்கொண்டுநீபத், தேனையுருக்குந்தொடையல் மிடைதருமுந்நான்குபுயச்செவ்வேண்மேவும். (உ)

வளமோங்குபரங்கிரியின்மான்மியத்தைச்செந்தமிழின் மகிழ்ந்துபாடி, யுளமோங்குபெருங்களிப்பைமுருகனடி யவர்க்கெல்லாமூட்டினனை, லளமோங்குபேரறிவினகத்தியனே வாயிரநாவமைந்தகோவோ, தளமோங்குவெண்சலசத்திருந்தகலைமகள்கொல்லோசாற்றுமின்னன். (௩)

எனப்புலவ ரகங்களிப்புற் றிவன்சனனநந்தவப்பே றெனவியக்கு, முனற்கரியபெருங்கல்விக்கருங்கடனம் பரன்கருணைமுற்றும்பெற்றோன், மனக்கரியதிறலாளன் கோற்றேனிற்கவிபாடுமதுரவாக்கிற், றனக்குவமைதானேயாநிரம்பவழகியநாமந்தழைத்தமேலோன். (௪)

அத்தனையமான்மியத்தைச் சித்தமுவந்தோன்றினையா யிரமதாக. வித்தகமார்தரவச்சிலேந்றியுலசெங்குமுறவிளக்கினனர். புத்தியுளோரதிசயிக்குஞ்சற்குணனெற்கினியநண்பு பொருந்தினின்றோன், அத்தியெனக்குமரனடிப்பத்திமிகுந்தொண்ர்நெஞ்சனகன்றவஞ்சன். (௫)

விண்மணக்குநறும்பொழில்சூழினையபரங்கிரிநகரில்மேவிவாழ்வோன், பண்மணக்குந்திருமுருகாற் றுப்படைபா ராயணஞ்செய்பண்பினுவி, னுண்மணக்குந்தமிழ்ம்பெறியுயராருணாசலசரணனுவப்பிற்செய்த, வெண்மணக்குந்தவத்துதித்த வெங்கடராயணசரணனெனுஞ்சீரோனே. (௬)

சிறப்புப்பாயிர முற்றிற்று.

இப்புத்தகத்தை எந்தத்தேசத்தார்களாயினும், எந்த அரசாக்ஷிக்குட்பட்டவர்க ளாயினும், தாங்களே திருத்தப்பட்டதாகச்செய்யுட்களில் நூதனமாறுபாடுகள் செய்து அச்சிடுவார்களாகில் மேற்படிபுத்தகத்தின் நஷ்டத்திற் குத்தரவாதஞ்செய்யப்படும்.

இனிமேலச்சிடப்படும் புத்தகங்களியாவன.

செவ்வந்திப்புராணமூலம்.

சீகாளத்திப்புராணம் மூலமும் உரையும்.

பிரபுலிங்கலீலை மூலம்.

மதுரைப்பதிற்றுப்பத்தந்தாயும் }
திருவிளையாடற்போற்றிக்கலிவெண்பாவும் }
ஒன்றாக விரைவிலச்சிடப்படும். }

உ

சிவமயம்.

# திருப்பரங்கிரிப்புராணம்.

## பாயிரம்.

### விநாயகர் துதி.

நலந்தழைதந்திடுநற்பதநீழலைக்...... ............... ... ..*
கலந்தவர்க்குக்கருணையரும்பிநின்...... ... ... ......*
றலர்ந்தவானந்தத்தேனுகவானன......... ...... ... ...*
மலர்ந்தகற்பகவேழத்தைவாழ்த்துவாம்...... ...... ...*

### பரங்குன்றீசுரர் துதி.

உலகெலாநிறைந்துள்ளும்புறம்புமா
யிலகுபேரொளியின்பழுந்துன்பழும்
விலகிநின்றவிமலன்பரங்கிரித்
தலைவன்பாதந்தலைமிசையேற்றுவாம் (க)

### சுப்பிரமணியர் துதி.

வேறு.

சுருதிமறைபிலிற்றியிடேஞ்சதுமுகனூர்சடங்கியற்றத்தோகைபாகன், கருதிவிழிவிருந்தருந்தக்கண்ணிறைந்தமேனியான்சைசீர்வார்ப்பத், தருதியெனக்கையேந்திப்பரிதிமதிவிளககேந்தத்தந்திமாதை, வருதியெனக்கைப்பிடித்துப்பரங்கிரியின்மணந்தவனைவணக்கஞ்செய்வாம். (உ)

### ஆவுடைநாயகி துதி.

பொழியருவியெனவொழுகக் கருணைவெள்ள மடைதிறக்கும் பூங்கண்மாதை, மழலையமுதம்பொழியப்பேசுமொரு பசுங்கிளியைமருவிநாளும், பழமறைகளோலிடவே பதம்பெயர்க்கும் பொலங்கொடியைப்பார்க்குந்தோறு, மழகொழுகநின்றவளைப்பரங்குன்றிலாவுடையையகத்துள்வைப்பாம். (ங)

## கற்பகவிநாயகர்துதி.

வஞ்சகத்திலொன்ருனைத்துதிக்கைமிகத்திரண்டானை வணங்காருள்ளே, யஞ்சரணமூன்ருனை மறைசொலுநால்வாயானையத்தனுகித், துஞ்சவுணர்க்கஞ்சானைச்சென்னியணியாருனைத்துகளெழானைச், செஞ்சொன்மறைக்கெட்டானைப்பரங்கிரிவாழ்கற்பகத்தைச்சிந்தைசெய்வாம். (ச)

## குமரக்கடவுள்துதி.

ஞாலம்போற்றயான்விரும்பிநாடும்பொருளையளித்தருள்வான்
மாலையெனவேகடம்பணிந்தமார்பன்வரிவண்டிசைபாடுஞ்
சோலையுடுத்தபழனிமலைத்தூயன்மகரஞ்சுலவியிடும்
வேலைதனிலேவேலையிடவேலைபுரிந்தான்பதம்பணிவாம். (ரு)

## தெய்வயானையம்மைதுதி.

வேறு.

வார்கொண்டகொங்கையெனுங்கோடுதன்ஞல் வடிவேலர்பன்னிருதோள்வரையைப்பாய்ந்து, தார்கொண்டகடம்பதனையுழக்கியோகத்தண்பரவைபடிந்திறைவர்தடங்கண்வண்டின், போர்கொண்டவிழிக்கருணைமதத்தையூற்றிப்பொருபடையாயென்வினையைப்பொடித்துநாளும், பார்கொண்டபரங்கிரிவாழ்தெய்வயானைபதமலரையிதையமலர்பதித்துவைப்பாம். (கூ)

## வள்ளிநாயகியம்மைதுதி.

மணிகொண்டமானிடத்துமுளைத்துவேடர்
மனைபதிந்துபசுந் தழையாய்மருவுஞ்சோதி
யணிகொண்டுதழைந்தருளிக்கொழுகொம்பாக
வமலர்புயந்தழுவிவெள்ளியசலமேறிக்
கணிகொண்டபுகழ்பூத்தென்வினையைக்காய்த்துக்
கவின்பழுத்துக்கண்டவர்க்குக்கருணையூற்றிப்
பணிகொண்டவள்ளியெனுங்கொடியென்னுள்ளப்
பங்கயத்தைச்சுற்றியிடப்பதித்துவாழ்வாம். (எ)

## பவளக்கனிவாய்ப்பெருமாள் துதி.

வேறு.

முன்னொருநாளரியதவமிழைத்தருளுமுனிவருக்கு முன்னர்க் காட்சி, யுன்னியகாலாதிவராகத்தி னொடுநாரசிங்கவுருவங்கா ட்டித், தன்னிகரிற்கமலையுடன் முருகர்மணக்கோலமெழுந்த கைமைநோக்கிப், பன்னுபுகழ்ப்பரங்கிரியிலிருந்தபவளத்திர ளைப்பணிதல்செய்வாம். (அ)

## திருமகள் துதி.

வேறு.

திரண்டமுனிவரிருபாலுஞ்சிறந்துதினமுஞ்சேவிப்ப, வரந்தந் தருளும்பெண்கொடியை வடிவேற்குமரன்மணக்கோலம், பு ரிந்தவழகையிருவிழிக்குவிருந்தாயருந்தும்புத்தமுதைப், பரங் குன்றமர்ந்த செழுந்திருவைப் பணிந்துதிருவைப்பொருந்து வாம். (கூ)

## ஆதிபுவனேஸ்பரிதுதி.

வேறு.

மருவிசிறும்பசுங்களபச்சேறொழுகத் திரண்டமுலைமார்பினு ளைக், கருணைநிறைந்தருவியெழக்கசிந்துகசிந்தூற்றுமிருகடை க்கண்ணுளை, யிருபுறமுமாதவர்களிருந்துகரங்குவிக்கவளரிய ல்பினுளை, யருள்பெருகும்பரங்கிரியி லாதிபுவனேஸ்பரியை யகத்துள்வைப்பாம், (க0)

## துர்க்காதேவி துதி.

பரங்கிரியில்மேவியருந்தவமிழைத்துவிறல்சேர்ந்து பாருளோ ங்கித், திரங்குலவுமவுணனையே வீட்டியவன்சிரமிதித்தசிலம் பினுளை, வரங்குலவுவேலவனுர்மணக்கோலங்கண்டிருந்தமகி ட்சியாளைக், கரங்குலவுசங்காழிதரித்துவளர்துர்க்கைதனைக்க ருத்துள்வைப்பாம். (கக)

## நவவீரர்கள் துதி.

வேறு.

பரையினூபுரமணிகளிற்பிறந்திடும்பாலர்
பொருவில்சூரனைக்கிளையொடும்பிடுங்கியபுயத்தார்

முருகவேளடிநிழலெனப்பிரிந்திடாமுறையோர்
விருதுமேவியநவமெனும்வீரரைப்பணிவாம். (௪௨)

## உக்கிரமூர்த்தி அண்டாபரணர் துதி.

வேறு.

பூண்டபுகழ்ப்பரங்கிரியில்வேலவற்குக்கொடும்பிழைகள் புரி வார்தம்மைச், காண்டகவேதுணித்தெரியுமுக்கிரனுமுக்கிரர் தாள்கருத்துள்வைப்பாம், நீண்டபகிரண்டமெடுத்தெடுத்தமு த்துமாலையெனநிரப்புமார்போ, ஞண்டகையண்டாபரணை டிப்போதைமுடிப்போதாயணிந்துகொள்வாம். (௪௩)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் துதி.

வேறு.

மறுவில்சீர்க்காழிவேந்தைமலைமகள்பாலுண்டோனைப்
பெறுகரித்தோலைப்போர்த்தபிஞ்ஞகன்பழையசோமன்
குறைபெறுதுண்டம்வேணிதரித்தவன்கொடுக்கநாலோ
டறுபதுகலையைவாங்குமையனைப்போற்றிசெய்வாம். (௪௪)

## திருநாவுக்கரசுநாயனார் துதி.

நீறுகுளிரமேனியிலேநீறுபூசிநெடுங்கிடங்கி
லூறுகடன்மேற்கல்லிறுசவூறுபடாதுமிதந்தருளி
யாறுதரித்தகடவுளைநல்லாறுதருதியெனுந்தமிழின்
வீறுபகருநாவினுக்குவேந்தர்பாதம்பணிவாமே. (௪௫)

## சுந்தரமூர்த்திநாயனார் துதி.

பரவைதனக்குத்தூதுரையாய்பரமாவெனவோர்வேதியனு
யரியுமயனுமறியாதவடியுமுடியும்பரவைமனை
மருவும்வாயிற்படிகாணவந்துதிரும்பும்வலக்கையிற்
பரசுதரனையெடுத்ததமிழ்பகர்சுந்தரனைப்பணிவாமே. (௪௬)

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

நீரணிகடவுள்மண்ணின்றெடுத்திடப்
பார்முழுதாண்டருள்பாண்டியன்கையா

லோரடிவலியவேயுதவிமற்றர
னீரடிவாங்குமோரிறையைப்போற்றுவாம். (௧௭)

## அறுபத்துமூன்றுநாயன்மார்முதலிய சிவனடியார்கள்துதி.

வேறு.

திண்புவியிலறுபத்துமூவருடன்சிவனடியார்திருத்தாள்போற்றிப், பண்புவளர்முருகவேள்பூசைபுரி சிவமறையோர்பாதம் போற்றி, யெண்புகழ்சேர்சிற்கந்தமலையிலுறைமானிடர்களென்றும்வாழ்க, நண்புவளர்பரங்கிரியின்புராணமெனவொருகாதைநடத்துவாமால். (௧௮)

## அவையடக்கம்.

மூநருலாவுபூங்குழலுமைமுலைமுகடுழக்கிச்
செருகவேகுழிசெய்திடுமேனியிலெறிந்த
வெருவுகல்லிணைமலர்கள்போன்மிலைந்தவன்குமரன்
மருவுசெந்தமிழ்கூட்டியென்றமிழ்செவிமடுக்கும். (௧௯)

அருங்கலைக்கடலளந்திடுமூதறிவோர்முன்
பரங்கிரிக்கதைபகர்ந்திடத்துணிதலியாதெனினுங்
கருங்களத்தனூர்தொண்டர்கள்கருதுவர்மற்றோ
ரிருங்களிப்பினையெய்தியெனெய்திலாதென்னே. (௨௦)

குடமுயிர்த்திடுமகத்தியன்குடங்கையிற்கொண்ட
கடலையானகங்கையடக்குவனெனல்போலும்
படர்பரங்கிரித்தகைமையைப்பகர்ந்திடுஞ்சூதன்
வடகலைப்பொருளிருந்திடயான்றமிழ்வகுத்தல். (௨௧)

## புராணவரலாறு.

இறைவர்கூறிடநந்திவானவன்செவியேற்றுப்
பொறைபெறுஞ்சனற்குமரர்பாற்புகன்றிடமுனிவன்
மறைகொழித்தவாய்வியாதனுக்குரைக்கமற்றவனே
யறைகழற்றிருமாணவன்சூதனுக்கறைக. (௨௨)

சூதன்மாதவத்தொகுதிகளிருசெவிபுகட்டும்
போதபுத்தமுதெனப்பெறும்புராணமூவாறுட்
டூதில்சைவமுங்காந்தமுந்திருப்பரங்கிரிசேர்
காதையைச்சுவைத்தமிழினுற்கழறுகின்றனமால். (௨௩)

---

# பதிகம்.

---

வேறு.

குதலைமொழிக்கவுரியுடன்கைலைமீது
குருத்துமதிச்சடைக்குழகனிருந்தவாறு
மதுரமொழியுமைவினவுங்குடிலைகூறு
மந்திரமஞ்செழுத்துபதேசித்தவாறு
முதிர்மதிசேர்குமரனுமைமடிமேல்வைகி
மொய்த்தமனுத்தகைமுழுதுமுணர்ந்தவாறுங்
கதிதவழும்பரங்கிரியின்வரவைச்சூதன்
கருதியமாதவத்தொகுதிக்குரைத்தவாறும். (௨௪)

மனுக்கரந்தபிழையுலகில்வழங்கவேண்டி
மருவுபரங்கிரியிறைவர்மலர்த்தாட்பூசை
புனிற்றிளையகுமரவேள்புரிந்தவாறும்
பூதானஞ்சிபிவேந்தன்பொருத்துங்காலைக்
கனத்தமறையவனொருத்தன்குறையக்கண்டு
கண்ணுதல்வந்தேதானமேற்றவாறு
மினித்தமொழிக்கலைமகளைமணந்துவேத
னெழுபிரமகூவத்தையியற்றுமாறும் (௨௫)

கும்பமுனிமாணவனார்சபித்தகுட்டங்
கோவிதாரத்துவசன்கழுவவேண்டி
நம்பிரமகூவத்திற்குடைந்தவாறு
நவையில்பரங்கிரிச்சிறப்புநவின்றவாறும்

பம்புதிரைச்சத்தியகூவத்திற்றோய்ந்து
பாரிலரிச்சந்திரவேள்குமரற்கன்பா
யம்புவிமேற்றிருவிழாவியற்றுமாறு
மரசனென்றுஞ்சத்தியவாக்கணைந்தவாறும். (உசு)

தீர்த்தவகைச்சிறப்பதனையுரைத்தவாறுஞ்
செய்யதமிட்கீரனைவெஞ்சிறையிலாக்கி
யார்த்தசுவைத்தமிழ்மாலைகொண்டவாறு
மவுணர்கிளைதடிந்துபதியணைந்தவாறும்
பார்த்துமகவான்மகளைமணந்தவாறும்
பணிந்தவர்க்குநாற்பொருளும்பாலித்தென்றுஞ்
சேர்த்தமணக்கோலமுடனிருந்தவாறுஞ்
செந்தமிழாற்சுவையூறச்செப்புவாமால். (உஎ)

## இதுமுதல்எட்டுச்செய்யுள்

## நைமிசாரணியவருணனை.

---

வேறு.

வெளியபாலையாம்வேணியிலிளம்பிறைசூடி
யொளிருநீறணிமேனியிலுமையெனுங்கொடிதான்
களிகொளப்படர்கமுகெனுமீசன்மாமுனிவர்
நளிர்தவத்திறுற்றலையசைநைமிசாரணியம். (உஅ)

மேகம்விண்ணிடத்தெழுந்தெனவிரிந்திடுஞ்சோலைப்
பூகமாதியநெருங்கிடப்போதினைமறைக்கு
மாகமுடெழுமிருளுடல்கிழியமாதவர்முன்
னுகமாமணியேந்திடுநைமிசாரணியம் (உகூ)

விளைகொள்பங்கமுற்றலொன்றுமேவிநாண்மருவிக்
களிகொள்வண்டலைத்திடக்கண்ணீர்தூற்றியேகாட்டுந்
தளையவிழ்ந்திடுகொங்கையிற்றூடன்மாதரைப்போ
னளிர்மலர்த்தடஞ்சூழ்தருநைமிசாரணியம். (௩0)

மனையெனுங்கதிர்சூழ்கலான்வளையெனுநிலவ
நிலையெழுப்பலாற்செழுந்திருப்பிறக்கலானெடிய
வலையிறுத்தலான்வரங்கிளராறுகூடுதலா
னரலையொத்திடும்வாவிசூழ்நைமிசாரணியம். (௫௧)

திருகுமால்கரிகோட்டினுற்றினந்தினம்பாய்ந்து
தரையின்மேலெழுகிழங்கினைத்தவஞ்செய்வோர்க்குதவும்
அருகின்மாதவர்வந்திடத்தலைகுனிந்தவரைத்
தருதருக்கனியுதிர்ந்திடத்தலைதுளக்கிடுமே. (௫௨)

பொருக்கெனப்படர்முனிவர்முன்புயங்கமாமணியை
யிருட்பிழம்பினைத்தகர்த்திடவிளக்கமென்றெடுக்கும்
பருக்கைகாலுறுத்துவதெனவழியினிற்பறவை
நெருக்கிவந்திருசிறையினாற்றூர்த்துநின்றிடுமால். (௫௩)

தண்பழுத்திடவுந்திளங்கால்சருகரிக்கும்
விண்புயற்குழாந்தினமுநீர்விழவுடல்விதிர்க்கு
நண்புறப்பெறுதத்தமக்கியன்றநாளன்றிப்
பண்பொடும்பொழில்நாடொறுங்கனிகளைப்பழுக்கும். (௫௪)

சுவைதினைத்திடுமாமறைச்சும்மையுங்கடவுள்
சிவமெனக்கிளராகமந்தெரித்தகம்பலையும்
பவமறுத்திடுபுராணநூல்பகுத்திடுமொலியு
நவையறுங்கடலொலிதருநைமிசாரணியம். (௫௫)

இவ்வனந்தனிலிருந்துமாதவமிழைத்தருள்வோர்
செவ்விசேரழற்கருமங்களியற்றியதிறத்தார்
பவ்வமென்றிடும்பிறவியைச்சுவற்றவேபரனைக்
கவ்வுநெஞ்சினர்கருணையூறியகடைக்கண்ணர். (௫௬)

மறைவடித்திடவிளிம்பினில்வடுச்செயுநாவர்
கறைமிடற்றனையருச்சனையிழைத்திடுங்கையர்
பொறைபொருந்தியமனத்தினர்புண்டரக்கீற்று
நிறுவுநெற்றியராந்தெழுத்துழுதிடுநெஞ்சர். (௫௭)

சுருண்டபொன்னின்வீழ்வேணியர்கண்டிகைத்தொடையாத்
திரண்டமூத்தியமார்பினர்சிவன்சினகரத்தை
யுருண்டுருண்டுதான்வலஞ்செயவுறுத்தியேகாய்த்து
மூரண்டருந்திருமேனியர்மொய்த்ததுறைகின்றார். (கஅ)

இத்திறம்பெறுநைமிசாரணியத்தில்வேதந்
தத்தடிக்கொருநாவினர்சவுனகாதியரா
மெய்த்தபோதனர்சூதனைப்பணிந்திடமிலைந்த
சித்தமோர்ந்துரைகேட்டியென்றிவையசெப்புவரால். (கக)

சுவையொழுக்கியபழையநூல்சொரிந்திடுங்கலனே
சிவனையேபொருளெனவுறதிப்படுந்தெளிவே
யவமடர்ந்திடுமெறிவதுதேக்கியகடலே
யுவைநாச்செறிந்தோங்கியபுணப்பெருங்குன்றே. (சு0)

நின்றுனைப்பதத்தேயுரைநிகழ்த்துவோகேட்டி
யின்றெமைத்திருவுள்ளமதிரங்கியேநோக்கித்
துன்றுமன்பிஞேடுத்தரங்கூறுதிதுகளோ
வென்றமாதவவென்றுபின் விளம்பன்மேயினரால். (சக)

திரைகளோலிடவருகடல்வயிறுநிமடிப்ப
வொருதிருப்பணிவிடையைவேற்குதவியகுமரன்
மருவுதொல்பதிப்பெருமையைமனமகிழ்ந்தெமக்கே
யுரைதியென்றுமாமுனிவர்களுரைத்திடச்சூதன். (சஉ)

களிதுளங்கியேவருசிரக்கம்பிதம்புரிந்து
குளிருமாமதிமுகத்திலேநகைதருங்குமர
னளிபெறும்பதிக்காதைநயைவினவுசீரதனை
விளையுமன்பொடுகூறவேமிருபவன்விளைக்கும். (சங)

கொள்ளுமயிரங்குலமறைநாவெனுமுரங்கொண்
டள்ளியள்ளியேதெள்ளிநான்மறையெனவமைந்த
வள்ளல்கூறியசாதையைவகுத்திடுந்தொறு
முள்ளமொன்றிடச்செவித்துளைநிரப்புமென்றுரைப்பன். ()

மதிக்குழந்தையைச்செஞ்சடைக்காட்டினில்வைத்தோ
னுதிக்குமன்பினோடுரைத்திடுங்காதையையுள்ளம்
பதிக்குநந்தியெம்மடிகளின்பாதங்கள்சூடி
விதிர்க்குமன்பினன்சனற்குமாரன்சிலவிளம்பும். (௪௫)

இருளொதுங்கியூற்றெழுந்திடுங்களத்தனாரின்றோ
ருருவுகொண்டுளாயுனதடிமாணவனடியேன்
முருகவேள்பதிப்பெருமையைமுண்டெழுமாசை
பெருகுசிந்தையேற்குணாயெனநந்தியெம்பெருமான். (௪௬)

ஈங்குநம்முழைவினாயதுமதியிளங்குழவி
தூங்கும்வேணியான்றுணையெனப்பருத்திறுமாந்து
வீங்குமாமுலையுமைக்குணாமேன்மையென்றுனாக்க
வாங்கியேசனற்குமாரனார்வியாதற்குவகுத்தார். (௪௭)

வகுத்தகாதையைவியாதனன்செவித்துணைமாந்தப்
பகுத்துரைத்ததீங்காதையாம்பரவையின்முகந்து
தொகுத்துணைப்பனென்றுடல்துளக்கியானந்த
முகுத்தகண்மணிச்சூதமாமுனிவரனுரைப்பான். (௪௮)

முதலாவது-பாயிரச்சருக்கமுற்றும்.

## இரண்டாவது குமரன் உபதேசச் சருக்கம்.

இதுமுதல் ஆறுசெய்யுளுந்-திருக்கைலாய வருணனை

போதமாயுருவெழுதொணாப்புதுமையாலெவர்க்கு
மாதிதேவனையுச்சியிலமைத்தலாலென்று
மாதவத்தினோர்கூறலான்மனுவுதவிடலால்
வேதமாமெனவிளங்கிடும்வெள்ளிமால்வரையே. (௧)

செங்கொடும்பவத்துடக்கினல்வினைவர்பனிநீர்
பொங்குமோர்கடற்பிறவியைப்புவியினிற்கடக்க

வெங்களிசன்மிகாமனுயிருந்திடவோங்கும்
வங்கமாமெனவைகிடும்வெள்ளிமால்வரையே. (உ)

தளிர்பொருந்தியகாரிகைநவின்றிடுவண்டாங்
களிகொள்வானவர்முடியடர்முடியுகுங்கனகந்
தெளிபராகமாஞ்சிவாலயம்பொருட்டதாஞ்சிறந்த
வெளியதாமரையொத்ததுவிளங்கியகைலை. (ங)

பொறியராமணிபடிகமாலயன்வரும்போது
பறவையாவையுமன்னமென்றணுகவும்பால்போன்
மறுவில்யானையாயிந்திரன்கரிகள்பால்வரவு
நிறையணங்கினர்வாணியாய்நிறைந்திடுங்கைலை. (ச)

அண்ணலைத்தொழப்படியுலாய்க்கோயில்புக்கமரர்
தண்ணிரைத்தமாமுடிதடித்தாகவேயதன்மே
லெண்ணிலாதெழூநந்திகைப்பிரம்படியிடியாய்
வெண்ணிறத்தவார்முகிலெனவிளங்கிடுங்கைலை. (ரு)

ககனமாகியமாயவன்கடவுளர்துதிசூழ்
நகைதழைந்தபொற்கோயிலாமந்தரநாட்டி
வகிர்மதிச்சடையானெனுமமுதினைவாங்கத்
ததுபயோததியொத்ததுகைலையாஞ்சைலம். (சு)

வெளியபேரொளிதுளும்பியவெள்ளியங்கிரியிற்
றுளியொழுந்தபொற்கோயிலிற்கொண்டபீடிகைமே
லளினமேலயன்விண்ணவர்நாரணனேத்த
வொளிபெறுஞ்சிவன்கோடிசூரியனென்னவுறைந்தான். (எ)

அருளொழுக்கியகடைக்கணுளம்பிகைமடிமேற்
பொருவில்சோதிகொண்டறுமுகக்குழவிபோந்திருப்ப
விருள்கிழிந்திடவிமைத்திடுமிளமதிச்சடிலன்
றிருவுளங்களிதுளங்குபல்கார்தைசெப்பினனுல். (அ)

இரதமூறிபசொல்லுமையிறையவனழகைப்
பருதுங்கண்கள்போற்சங்கரன்பகர்ந்திடுங்கதையைத்

திரைபெறுங்கடலமுதெனத்திருச்செவிசாத்தி
மருவுபின்சிவஞானமேன்மனம்பிடித்தெழுந்தாள். (௯)

சூரணங்கினர்கற்பகமலர்மலர்தொடுத்த
தாரணிந்திடுசூழல்சிவனடிமலர்தழுவ
வார்செறித்திடவளர்முலைக்குடங்கள்குப்புறவே
யாருமன்பினோடுமைபணிந்தஞ்சலிமுகிழ்த்தாள். (௧0)

அஞ்சலிதந்துநின்றடியனேன்கூறலைக்கேட்டி
நெஞ்சயிர்த்திடுபுராணநூல்நிகர்த்திடுமறிவால்
வஞ்சமாகியபிறவியைமாற்றிடவரிது
விஞ்சைசேர்சிவஞானமேபாகதிவிளைக்கும். (௧௧)

ஆதலாற்சிவஞானமேயடைந்திடமாலைப்
போதவிழ்ந்திடவண்டுகிண்டுஞ்சடைப்புனிதா
வேதவுச்சியிற்பொருடனைவிளக்குமைந்தெழுத்தைக்
கோதிலாதெழுபிரணவமந்திரங்கூட்டி. (௧௨)

என்செவித்துளைகுடித்திடவியம்புதியதனை
நின்சரோருகத்தாளிணைபிரிந்திலேனினைந்தே
யன்செவிக்கிடவறிவிலேனெவ்வகையுடைத்தேன்
பொன்செய்வார்சடைப்புண்ணியநின்செயல்புதுமை. (௧௩)

மன்னுநின்னருட்பார்வையைமருவியநாளிற்
பன்னுநல்லறிவெய்திடும்பக்குவகால
மின்னகேள்வியையெடுத்தநின்செயலினையெவரோ
புன்னவல்லவரித்திறமுரைத்தியென்றுரைத்தாள். (௧௪)

என்றகாலையிற்பராபரனிளநகையரும்பித்
துன்றுவார்சடைவீக்கியமணிமுடிதுளக்கி
நின்றதேவரைப்போகவிட்டோலக்கநிறுத்திக்
குன்றிலேவருகொடிமுகம்பார்த்திவைகூறும். (௧௫)

மறைகளாயிரஞ்சிலம்பெனவடிவெடுத்தலறி
யறைகவேமுடிதந்திடாப்புகழ்பெறுமணங்கே

குறைவில்வேதமாந்தயிரினைக்குடைந்துடைந்தெடுத்த
நறியவெண்ணெய்போன்மந்திரங்கேளெனநவிலும். (௧௬)

வேறு.

மாநலங்கிளருமாறெழுத்தாயமந்திரத்தெழுபெருங்கோடி
தானெனவிரியுமனுக்களுமறையுஞ்சடங்கமுமாகமமனைத்தும்
பூதிறைபதினெண்புராணமுமெண்ணெண் கலைகளும்புவனமு
ந்தோற்றுந், தேனெழுக்கெறிந்தூற்றெழுந்தடங்கிளவிச் செய்
யவாய் மலர்ப்பசுங்கிளியே. (௧௭)

பாரெழுநுட்பந்தன்னிலேநுட்பம்பருமையிற்பருமையாலெவ
ருந்,சீர்பெறக்கிடையாதரிதிலேயரிதாய்ச்சிறந்திடுமந்திரப்பெ
ருமை,யேர்கொளெம்மனையார்கோடியாண்டினிலுமெடுத்தெ
டுத்துரைக்கினுமரிது, வாரிறுத்திடங்கொண்டெழுந்திளமாந்
துமலைபொருமுலைசுமந்தசைந்தோய். (௧௮)

இம்மனுப்பெருமைதெரிந்தறிவெய்திலெடுக்குமண் டலங்களி
ல்வழங்குந், செம்மையின்பொருளைக்கரதலாமலகஞ்சிறந்தெ
ளத்தெரிவதுமன்றி,வம்மினென்றிடவேசித்திமங்கையர்போ
ல்வந்துற்றேவலையியற்றுங், கொம்மைவெம்முலையைக்கொ
ண்டுதள்ளாடிக்கொடியெனநுடங்கியவிடையாய். (௧௯)

முதலெழுத்தகரவுகரமேட்டுமகரமிம்மூன்றெழுத்தடை
வே, யதிர்மறைமூன்றுங்கடவுளர்மும்மையரும்பற்றிவிந்து
நாதங்க, ளிசெயவுரைக்கக்குடிலையென்றைவருரைத்திடுமெ
ழுத்தியோகத்தே, யதர்வணமருவுநம்முருநாதமருள்பெறுவிக்
துகின்னுருவம். (௨௦)

இவன்சிறிதுரைத்தேம்பிரணவஞ்சையமெய்திமெந்திரவித்தா
ம், பவந்தெறித்திடவேயஞ்செழுத்துரைக்கமுன்னிதுபகர்ந்தி
டல்விதியா, மூவந்துநம்படிவத்தஞ்செழுத்துறையுமிடங்களை
யுணர்த்துதுங்கேட்டி,சிவந்தசெங்கனிவாய்மிழற்றியகுதலைத்
தேனொழுக்கியபசுங்கிளியே. (௨௧)

## வேறு.

ஒருபாணென்பாணெழுத்துமிசையுறுமவ்வெழுத்துமென்மூ
ன்று, மருவுமெழுத்தின்மிசையெழுத்தும்வளருமிருபத்தொ
ன்பதின்மேற், செருகுமெழுத்தையிகரமெனச்செப்புமெழுத்
துநாலேழ்மேற், பொருவிலெழுத்தினெட்டெழுத்துமைந்
ததின்மேற்பொருமெழுத்தும். (௨௨)

கூட்டியிவைபம்பாணென்றின்குளிர்முன்னீரொன்கழிந்தலி
பி, மூட்டியுரைக்கத்தாந்தமுடன்பாந்தம்வாந்தமுழுவாந்தங்,
காட்டுமாந்தநவ்வாதிகலந்தயாந்தமஞ்செழுத்து
நாட்டுநவிற்சேர்வருக்கமூன்றுமகரநன்கரண்டம். (௨௩)

குய்யம்விளக்குமைந்தெழுத்தைநிற்குமுறைமைகூறிணமா
லையமனுகாதுளந்தெரிந்துபொருளையுணர்ந்தேயருள் பொங்க
வையம்பொலியுமோதாமையோதியறியவல்லவனே [யிலே
செய்யவகிலந்தொழுஞ்சிவனுந்தெளிதேன்றனும்புஞ்சொற்கு

இந்தத்திருமந்திரவீறுமற்றைமனுக்களிடந்தடையாச்
சிந்தித்துவ்வமையிதற்கிதுவேதெரிக்கலாகுமிம்மனுவே
யந்தமருவாமந்திரத்துக்கரசாஞ்சதருத்திரத்தினிடை
யுந்திவிளங்குங்கருணைகசிந்தூறுங்கடைக்கட்பசுங்கொடியே

ஈட்டுங்கொடியபிறவியுடனிறக்குந்தொழிலைமாற்றுகதி
கூட்டுமுண்மைதனில்வடித்துக்கொண்டசாரமிம்மனுவே
வேட்டசதுரர்வடநீழல்விமலனனையார்விளம்பநலங்
காட்டுமற்றையவற்கிலையெங்கருத்திற்றெவிட்டாப்புத்தமுதே.

குருவேதினமுமெய்வருந்திக்கொணருமறியாப்பெருநிதியங்
குருவேயிரவுபகற்பயிற்றிக்கூறவடையும்பெருங்கல்வி
குருவேபரமானந்தத்தைக்கூட்டுமழியாத்திருவீடு
குருவேமனவாசகங்கடந்துகூறவரிதாம்பரப்பிரமம். (௨௭)

இதலைப்பீசாக்கரம்பொருத்திவிசைக்கவலிதாம்வேறுபட்டா
ல், முதிர்மந்திரங்கள்வலியின்முழுமையாவித்துமுளைத்தாலும்
பொதியும்பைங்கூழ்விளையாதாமதுபோற்புவியிற்பயனிலையா
மதுரமொழுகியுவட்டெடுக்குமழலைச்செழுஞ்சொற்பசுங்கிளி
[யே. (உஅ)

பெர்ருவில்வளர்மந்திரத்தையுருவியற்றுங்காலைப்புனிதமுற்று
மருவுமவுணியாகியென்றுந்தனிமைபெறவேவைகியுளத்
தொருமைபொருந்தியுருவேற்றவேண்டுந்தனியேயிருந்துரை
க்குந், திருமந்திரமெய்யெனவிளைக்குஞ்சிலம்போலிடத்தாள்
பெயர்த்திடுவோய். (உ௯)

தொல்லைக்கடவுட்பழம்பாட்சுருதிவகுத்தமுறைவழுவா
ரெல்லைக்களவிற்பிறவியெடுத்தெச்சமுயன்ஹ்ரீம்மனுவே
யொல்லைப்பயனையுதவுமெனவுறுதிபெறுவருயர்ந்தெழுந்து
வல்லைப்பொருதவட்டமிட்டுவளர்ந்துதிரண்டகுவிமுலையாய்.

புனிதம்புரிவாரேனுமதுபுரியாரேனுமெவ்வளவி
லினிதுபிறந்தசுதிகள்செய்திஃசையாக்காலமெனவெண்ணூர்
மனதில்விழைந்தவிருப்பெய்தியுருவேற்றிடுவோர்வடியாத
சனனக்கடலைக்கடந்துகதிசார்வார்மறைகூவியகுயிலே. (ஙக)

நாதமெனதுபேருருவாலஞ்சேர்விந்துகினதுருவ
மாதிமனுவையையைந்துபகுதியாக்கியெண்கருமம்
போதவிசைப்பர்புல்லறிவோர்பொன்னங்கொழுவாற்றினைவி
தைத்துக், கோதுபடுஞ்சோறுண்பர்நல்லோர்கதிவேட்டிடுவர்
கோகிலமே. (ஙஉ)

நெறித்தமுலையிற்பால்சொரிந்துநிறையும்பசுவிற்கபிலைநன்று
கறித்ததசையூண்விலங்கினத்திற்பேழ்வாய்க்கடுங்கோளரியதி
கந், தெறித்ததிவலையருவிபொழிசிலம்பின்மேருவரையுயர்ச்சி,
பொறித்தகறியசுவைத்தனிற்பொலியுமமுதமிகமேன்மை.

இருளைக்கிழித்தகைத்தவொளியதனிற்பசுமான்றேர்பருதி
தரையினூர்திதனிலியானைதாதுக்களின்மாற்றிருந்தசெம்பொ

ன், வருணமதனிற்கடவுண்மறைவடித்துத்தெளிந்தநாவுடை
யோர், விரியுஞ்சோதியணியதனுள்விளங்குங்கருடமணியதி
கம். (௧௪)

திரைகளுதித்துநடனமிடுந்தெண்ணீராற்றிற்பகீரதியே
சுருதிமுறையிட்டேற்றியிடுந்தொன்னூற்பொருள்சாயத்திரி
யே, பொருவிற்றனபாத்திரத்துண்மறையின்குடுமிப்பொரு
ளுணர்ந்தோர், மருவும்பலகோடிப்பரப்பின்மனுக்கடனிலஞ்
செழுத்ததிகம். (௧௫)

கடவுளுருவாமைந்தெழுத்தின்பெருமைசுருக்கிக்கழறினமாற்
படருஞ்சுவையூறமுதெனவேசெவியிற்பருகிப்பதித்துநெஞ்சி
லிடையூறின்றியாயிரத்தோடிருநான்குருவையயற்றுதிபூர்[ய்.
தொடரின்வரிவண்டடைகிடந்துவிளரிதொடுத்தநறுங்குழலா

பெறுதற்கரியமந்திரத்தைப்போராதரவால்விதித்தபடி
நிறுவியுருவேற்றிடுஞ்சதுரர்நிறையுங்கோடிகுலங்களுடன்
மறுவில்சோதிக்கைலைதனில்வாழ்வாரோதாதோதியிதை [ய்.
யறைவரழியாவருளடைவாரன்னம்வெருவநடை பெயர்வோ

அருளைந்தெழுத்தேபரப்பிரமமைந்துலிபியேசிவமெழிலைத்
தருமைந்தெழுத்தேபரமானந்தத்தைவிளைந்தநிலம்புனிதம்
வருமைந்தெழுத்தேகதியடையவகுத்தகுட்சிக்கடவுண்மயம்
பொருளைந்தெழுத்தேயானந்தவுருவைவிளக்கும்புகலிடம். ()

வேறு

இம்மனுவதற்குத்தெய்வமிருடிநாஞ்செகத்திற்சந்தந்
செம்மைசேர்ந்தழியாவீடுதிகழ்வினியோகமாகும்
கொம்மைவெம்முலையாயென்றுகுளிர்கிடந்திறைக்குங் கங்கை
சும்மைசெய்திலகும்வேணித்தூயவன்கிளத்தினனே. (௧௯)

கிளத்தியமாற்றங்கேட்டுக்கிஞ்சுகக்கனிவாய்க்கிள்ளை
யுளத்தினிலுவகைபொங்கமந்திரத்தொருப்பாடுற்றாள்
வளர்த்தியமடிமேல்வைகுமழலைவாய்க்குழவிச்செவ்வேள்
குளதெரிவைத்தோன்சொற்றபொருளெலாங்கொள்ளை கொ
ண்டான். (௨௦)

உணாகொள்மாணுக்கரென்னவுற்றமைக்கறைந்தகேள்வி
மருவியவிதநிற்போதுவளர்தழைசினைபோலெள்ளிற்
புணைதருதயிலம்போலப்புந்திமான்கல்விபோலத்
தரணியிற்பொதிந்தநீர்போற்றழைந்தது குமரன்கேள்வி. (சக)

ஆய்க்குறைகேள்விநெஞ்சிலழுந்திடவுணர்ந்துகொண்ட
சேய்க்கிளம்பருவமைந்துவயதுபோற்றிகழநோக்கி
வேய்க்கிணையிருதோள்கொண்டவிமலையுஞ்சிவனுநேசம்
வாய்க்கவேயிருவர்கண்கள்விருந்துண்ணவாழுநாளில். (சஉ)

காரொளிபெருகியூறக்கவிழ்ந்திடக்குங்கண்டன்
சீர்கொளோலக்கஞ்சேருந்தேவரைவிழியானீக்கி
யேர்கெழுபனுவலாட்டியிருமுலைமுகடுபாய
மார்பனைநோக்குங்காலைமனமெழுங்குறிப்பைக்கண்டான். ()

வண்டுழமுறுக்குவிட்டுமலர்ந்தமாலிகையான்வேணித்
துண்டவெண்பிறையினானைதொழுதுவாய்புதைத்துநிற்கக்
கண்டுசெவ்வேளைத்தூயகலைகளையறிவியென்று
னெண்டிசைகதைகளாகவியம்பிடும்பொருட்டிதன்றே. (சச)

செப்பியமாற்றம்வேதன்சிரம்பெறச்சூடிமேனித்
துப்பெழுங்கோடிபானுச்சோதிகொண்டசைந்துநிற்கு
மொப்பிதழ்சேயைவாவென்றுரைத்திடவயன்பின்போந்து
கொப்பெனவொருபாற்கோயிற்சூறகியேயிருந்தார்மன்றே.

கோள்படுகணிதநூலின்குலவியவோரைபார்த்து
வேள்படவிழித்தசெந்தீவிழிப்பிரான்மூத்தபிள்ளை
தாள்படவணங்கிவேதன்றருபிரணவத்தைச்சாற்றத்
தோள்படுகடப்பந்தாரான்கையமைத்திதனைச்சொல்வான் சசு

நான்முகத்தொருவகேட்டிநவின்மொழிப்பொருளைச்சாற்றி
யான்முதற்பொருளைக்காணவாசையிங்குடையேனீயுந்
தேன்முகந்தூற்றும்வாய்மைதெரிந்திடுங்குருவாமென்ன
வான்முகடளந்தசோதிவள்ளலுக்கயன்சொல்வானல். (சஎ)

குளிபமழலைவாய்மைக்குமரவேள்கேட்டிசால
வளமைசேர்கருவிநூலின்வகைகளையறிந்தபின்ன
ருளமனுப்பொருளைக்காணவுறுதிவாய்த்திடுவதன்றித்
தளர்தருசிந்தையேற்றுச்சாற்றரிதென்றுசொற்றான். (௪௮)

என்றுசொற்கூறஞானத்திளங்களிறனையான்கேட்டு
நன்றுநன்றெனச்செவ்வாய்வெண்ணகைநிலாக்கற்றைதூன்
வொன்றுநீயறிகிலாதாயோதியவேதமென்கொல் [ட
பொன்றிகழண்டமெல்லாம்பூத்ததுமென்கொலென்றான். ( )

இன்னனபுருவநெற்றியேறிடச்சிவந்துபார்த்துப்
பன்னிருவிழியான்செய்யபவளவாய்மலர்ந்துகூறப்
பொன்னவிர்கமலச்சேக்கைபொலிந்தவன்றுணுக்கமிட்டுத்
தன்னுடல்நடுங்கிநாணந்தாங்கியேவெருண்டெழுந்தான் (௫0)

எழுந்துடன்விரைந்துவந்தேயிரைந்துநீர்துளும்பத்திங்கட்
கொழுந்தொதுங்கியதோர்வேணிக்குழகனைக்கண்டுதாளில்
விழுந்தெழுந்திருகைகட்டிவிழியினீரருவிபோல
வழிந்திடநின்றவேதன்மனக்குறிப்பதனைக்கண்டான். (௫௧)

இருள்பழுந்தொழுகுங்கண்டனீன்றதோர்மகன்மேலாசை
பெருகிடச்சினந்தார்போலப்பேசியேவயனைநோக்கி
யருகிலஞ்சலித்துநிற்குங்கணங்களையழைத்துநீர்போய்
முருகனையழையுமென்றமொழிப்படியழைத்துவந்தார் (௫௨)

வந்ததாட்சதங்கைகோடிமறைகளைமுறையிட்டார்ப்பச்
சிந்தையிலுவகைபொங்கத்திருவடிபெயராநிற்குங்
கந்தனைவெகுண்டான்போலக்கழறியேகலைகடேருங்
கொந்தவிழ்கமலநின்றாற்கொண்டதோர்குறைகூறென்றான்.

என்றபோதமுதுங்கைக்கவினித்திடுங்குதலைச்செந்தேன்
மன்றலம்பவளச்செவ்வாய்வழங்குவதெனவேலையா
நன்றிகொள்கலைகள்கூறும்பிரமனேநவின்றவாய்மைக்
கொன்றியபொருள்கூறென்னவூமர்போனின்பால்வந்தான்.

நிகழ்ந்ததிச்செய்தியென்னை நிறைவிடமொழுகும்வாய்ப்பன்
னகஞ்சடைக்காட்டில்விட்டோனலங்கெழுமகனைநோக்கி
யுகந்தபின்கூறும்வேதமோதியேபயிற்றவல்லா
னகந்தனிலுதித்தவண்ணமியற்றுவசறனேயன்றே. (௫௫)

ஆங்கதுவன்றியன்னானருளியமொழியைத்தட்டித்
தீங்குறவெதிரேகூறச்செய்யுமோவதுவுமன்றி
யோங்கிடுமவர்க்குத்தானேமடம்பகர்ந்திடுதலுண்டோ
தாங்கியமதியம்போலத்தழைத்தசண்முகனேகேட்டி. (௫௬)

எனுமுறைகூறலைவேலிமைத்திடுங்கரத்தோன்சொல்வான்
பனிமதிக்குழக்கைதோற்றும்பவளவேணியவேதாவை
வினவியகுடிலைக்கொத்தமந்திரமில்லையீதிற்
புனைசராசரங்களியாவும்பொலிந்திடுங்கேட்டியென்றான். ௫௭

அப்பொழுதினையமூரலரும்பிவெண்ணிலவுகாலச்
செப்பியசுடிலைமந்தமெரிந்தசெவ்வண்ணகூறென்
றொப்பிலான்சென்னிதாழத்தேயுவந்துதன்செவியைக்காட்ட
விப்படிவினவுமோசொல்லெளியதோவென்றகூற. (௫௮)

எழின்மணிதிரண்டுசோதியெடுத்தெடுத்திறைக்கும்பீடத்
தழைதராநாமேவைகத்தாழ்ந்துநின்றெம்மைநோக்கி
வழிபடுங்கரங்கள்கூப்பில்வருக்கலாமெனமால்கானைக்
குழகனுமிழிந்துசெவ்வாய்குறுநகையரும்பிநின்றான். (௫௯)

இளங்கதிரனையசேயையெழின்மணிப்பீடத்தேற்றித்
தளஞ்சதமுடுத்தகஞ்சத்தடக்கையைக்கூப்பியையா
வளம்செழும்பொருள்கூறென்னமாதுமைக்கிசைத்தவாறு
விளங்கியதகங்கைநெல்லிக்கனியெனவிரிக்கலுற்றான். (௬௦)

துறக்கமாநகரில்வாழுஞ்சுரர்பெறுமாண்டியொன்று
நிறைத்தமூச்செழுப்பலின்றிநிகழ்த்தியுங்குடிலைக்கீற்று
மறைப்பொருண்முடிவுகாட்டாவகைதெரிந்தமரர்க்காகக்
கறந்திடுங்களத்தனேக்கிக்காரிகைசகுனோத்தரனில். (௬௧)

அன்னவள் மடிமேல்வைகியறிந்தமையாகுமென்று
முன்னியகுருவைத்தாழ்ந்துமுறையுபதேசஞ்செய்யாப்
பன்னுமந்திரங்களுஞ்சம்பமென்றியுலகோர்கொள்வர்
பின்னதுவேண்டிநம்மைப்பீடிகையுழைநில்லென்றாய். (௬௨)

எனுமவைசிறிதுற்றலுமிருவிழிக்கருணைப்பார்வை
தனையளித்திலகுஞ்செவ்வாய்த்தண்ணிளமூரல்செய்து
கனைகடல்வயிறுதீயக்கதழெரிவைவேல்பாக்கும்
புனிதனைத்தழுவியுச்சிமோந்திதுபகல்வதானான். (௬௩)

நின்னுருநமதுவிம்பமென்னினுமுலகநீதி
யுன்னியகுருவாலன்றியுணர்மனுச்சித்தியாகா
தென்னவேயிணங்கிச்செவ்வேலெழுந்துதாள்சிரத்திற்சூடி
முன்னமேநிற்கச்செங்கைமுண்டகமுடிமேற்சேர்த்து. (௬௪)

சுவைபழுத்தொழுகுந்தெய்வச்சுருதியாறங்கமாதி
நவையறுகலைகளெல்லாநவின்றுசெவ்வேன்முன்னாங்கு
செவியினுளமுதமென்னத்தெவிட்டிடவுபதேசித்தான்
சுவைதருநாப்பன்னகக்கங்கணமமைத்தகையான். (௬௫)

பின்னருங்கூறுஞ்செந்தேன்பெருகியகடப்பமார்ப
தொன்மைநூலெமக்குங்கூறுந்தொடர்பினாற்சுவாமிநாத
னென்னவேபெற்றாய்நாமேயிருவருமெனக்கொண்டாலும்
பன்னியவர்த்தியாமேபரிகரித்திடுதல்வேண்டும். (௬௬)

நீதியையியற்றவேண்டிநீதவஞ்செய்தல்வேண்டுந்
தீதறுசோதிமேருத்தெற்கேநாவலந்தீவி
லேதமில்பரதகண்டத்தெய்துகாவேரித்தென்பாற்
கோதிகழ்பாண்டிநாட்டிற்றுளிர்மணிசிதறலம்பையை. (௬௭)

இன்னதிபுனித்தக்கூடற்கெழில்பெறுதிருக்கிக்காய்
மன்னுமியாசனையிற்பாகமருவிநாகவெற்பி
னொன்றுகாற்காதந்தென்பாலுற்றிமதன்பேர்கேட்பிற்
றன்னினையில்லாஞானசத்திபதியாமன்றே. (௬௮)

தக்கதோர்பிறவியாழிதணந்திடவேரடமாகு
மக்கிரிவடபாலுற்றேயானசத்தியகூவத்திற்
புக்கமேற்பாலிற்கூவம்புத்திரகூவமூழ்க
மிக்கசெய்பெறுவர்பாவவெம்பிணிமிடியைத்தீர்ப்பார். (சுக)

சிட்டர்சூழ்வளாக்கீசானத்திக்கிலோரம்பினெல்லை
மட்டவிழ்கமலவோடைவளருநின்றுமதீர்த்தங்
கட்டுணைகொண்டுகண்டோர்கரத்தினாற்றொட்டோர்சிந்தை
யெட்டியவிருப்பமீயுந்தீர்த்தமதெய்திமூழ்கி. (எ0)

தொல்லைநீர்தருப்பணாதிச்சுருதிமந்திரத்தாற்செய்து
மல்கியவேததானம்வழங்கிநம்முருவாம்வெற்பை
வில்லெழுமலர்கொண்டேத்திவேலினாற்கீண்டுஞாலத்
தொல்லையிலெழுப்பநாளுமுன்பெயர்மருவுதீர்த்தம். (எக)

சிறிதுசேர்வாயுகோணத்திசைபெறவிலிங்கஞ்சேர்த்து
மறைமனுப்படியீரொட்டுவரிசையினியற்றிப்பூசை
குறைவறமுடித்துநோன்புகொரணர்தியென்றுவமைபொங்கி
நிறைதரவழகுவாய்த்துநின்றகண்மணியேயென்றான். (எஉ)

இருளுடல்கிழிக்குஞ்சோதியிறைவர்பன்னிருவர்நாப்பண்
பொருமதியாறென்றேதப்பொலன்குழைவதனங்கொண்
மருவியதுணைவர்வீரவாகுவாமொன்பதான [டோன்
தருமிளங்குமரரோடுந்தனதெனக்கணங்களோடும். (எங)

பார்கொளுக்கிரனுமண்டாபரணனையருஞ்சூழக்
கார்கொள்விண்முகடுநீண்டகைலையைத்தணந்துசோதி
யேர்கெழுகதிர்கள்கோடியெழுந்தெனத்தேர்கடாவிச் [ள்
சீர்கொள்விண்படர்ந்தான்வேதச்சிலம்பலம்பியதாட்செவ்வே

இரண்டாவது-குமரன் உபதேசச்சருக்க
முற்றுப் பெற்றது.

பாயிரமுட்படச்சருக்கம்-உ-இ-கூடிய
திருவிருத்தம்-ரஉங.



# மூன்றாவது - குமரன் தவசுச்சருக்கம்.



தன்னதாகியவன்னைகேழ்விதனைப்புகன்றிடுதுகளறப்
பொன்னின்வார்சடையண்ணல்சொற்படிபுரியவெள்ளியெ
ஞுந்திருத், தொன்னகத்தையகன்றுசண்முகன்மேவுகாதை
தொகுத்தனம்,பின்னர்சத்தியகிரியணைந்துதவஞ்செயுங்கதை
பேசுவாம். (க)

தொன்மைநூல்பொதியுங்களஞ்சியமென்றகுதனையேத்தியே
பொன்மெலிந்திசெவுனகன்சிலபுகலும்விண்முடிதடவியே
மின்னுசத்தியகிரியெனும்பெயர்மேவுகாரணமேதுமுன்
மன்னுஞாலமணைந்ததேதெனமாதவன்சொல்வகுப்பனால்[உ]

முன்னமோர்பகனஞ்சொழுக்கிடுமுள்ளெயிற்றைநிறைத்தவா
ய்ப்,பன்னகத்தொடுவாயுவேபகைகொண்டுதோள்வலிபாரி
ணி, யென்னவேயிருவோர்கள்போராயிழைந்தகாலையில்வா
யுவு. மன்னுபல்லுயிரீறுசேருமுகாந்தமாருதமானவே. [ங]

ஒளிதுளிம்பிவளர்ந்துவான்முடியுடையநீடியமேருவின்
கிளருமெய்யிலறைந்துவோதுகெட்டசைந்திடவீசியே
வளர்முடித்திரள்பிட்டெறிந்திடவாமருங்கிடைகல்லதாய்
முளைதரப்பெறுகந்தமாதனமுடியிலெண்சிகரம்பெறும். [௪]

அந்தநற்கொடுமுடிகளுபமருஞ்சுனைபம்விளங்குசீர்
தந்தகந்திருவஞ்சுகேதுதழைத்திடுங்கதிமந்தர
முந்துசத்யசிருங்கம்வைணியமொய்த்தசித்திரநாமமாய்
வந்தவெட்டினுளாறதாகிவளர்ந்தசத்யசிருங்கமே. [ரு]

வேறு.

செஞ்சொன்மறைகிடந்தலறிமுறையிட்டேத்துஞ்செங்கமலத்
தாண்முருகன்செய்கைதன்னுள், மஞ்சுதவழ்கந்தகிரிசிதறத்

தாக்கிவாயுமிகவெகுண்டுபுயவலியினாலே, விஞ்சியசத்தியசி மையம்பறிதுவீசமேதினிசெய்தவப்பயனால்விளரிபாடிச், கொஞ்சியளிமுரன்றபொழிற்பாண்டிநாட்டிற்குலவிவிழுந்த துநிலைமைகொண்டதம்மா. [சு]

அப்பொழுதுவான்வழிகொண்டகன்றகாலையமரர்வெருண் டேயரம்பைமாராைத்தேடிக், கைப்பதுமங்கொண்டிறுகத்தழு வியீதுகருத்தறிந்தேபரமிதென்றுகரங்கள்கூப்பத், துப்பருவி சிதறியமாமணியைக்கண்டுசூர்மகளிர்கையேந்திச்சூழ்ந்துவாங் க, மைப்புயல்கள்துயிலொழிந்துசிதறிவானில்வளர்பெறுகற் பகத்தருவின்மருவமாதோ. [எ]

கட்வருவிசளசளெனச்சிதறவூற்றிக்கரும்புயலைப்பாய்ந்துளக்கி க்களித்தயானை, படர்பெறுகற்பகத்தளிர்க்குத்துதிக்கைநீட்ட ப்பார்த்துவரும்வெள்ளானைபரியகோட்டி, னிடையொடியக் கிரிவீழப்பாயுங்காலையெண்டிசைவெங்கரிபிளிறியினைக்கச்சூ ழும், புட்விழுதுகறனெளிந்துகம்பஞ்சேரப்பொருப்பெட்டுந்த லைதுளக்கம்புனையமன்றே. (அ)

கூன்றிரைகள்குதித்துலவுங்கட்லகளேழுங் கொதித்துவாய்வி ட்டரற்றக்குன்றின்மீதே, வான்றடவுங்குடுமிபெறுமுங்கிலீன் றமணிமுத்தமுடுப்போலவயங்கிச்சூழத், தேன்றதும்புஞ்செண் பகப்பூத்தேவர்தூவுந்திருமலர்போலேசிதறத்தேன்கள்பாட, நான்றமலர்ச்சோலைதலைதுளக்கிக்கார்போனறவெங்கும்வீசுகு ளிர்நனுகமாதோ. (கூ)

பையரவின்சுடிகையின்மேற்கிடந்தஞாலப்பல்லுயிர்சேர்தவ ப்பயனாற்பரமன்வெற்பா, யையமறவருவதெனக்குயில்கள்கூ வியண்டர்களையழைப்பதுபோலாகநீடுந், துய்யவிசைகின்னர ர்போல்வண்டுபாடத்தோகையர்போல்மயிலாடிச்சூழப்பக்கம், பெய்பருவிசாமரைபோலசைய்ப்புள்வாய்பிளந்தகலாவியமெ னவேபேசியார்ப்ப. (கo)

அண்டகடாகத்துச்சிவெடித்தாற்போலவவனிகிடுகிடுகிடென வனந்தன்பாரங், கொண்டதலைநெருக்கெனவேயுழக்கிச்சோர க்குவலையத்தில்வீழ்ந்தமிழ்ந்திக்குலவுங்காற்று, மண்டுமனுக்கா ணவொலியெதிரோவாங்கமற்றவரை யொருசாமமறுகஞானத், தெண்டலகைவிண்ணோர்கைமுழத்தளவுகாணுமெழிற்சிருங்க ஞ் சத்தியவெற்பென்னுமன்றே. (கக)

இவ்வகைச்சத்தியகிரியின்வரவுகூறுமெழிச்சூதன்பதம்பரவியி ரண்டுகாதிற், செவ்வியமுதம்பொழிந்ததெனவேகொண்டுதெ ரிந்தசவுனகமுனிவன்செப்புஞ்செவ்வேள், கொவ்வையிதழு மைபாகன்பூசைசெய்யக்குலவுபரங்கிரியதனிற் குறுகிநெஞ்சி, லவ்வியமின்றேன்புசெய்தகதைகூறென்னவருட்சூதன்சு வைதுளிக்கவறைகின்றனே. (கஉ)

இருட்பிழம்பைத்திரட்டியெடுத்தருந்துஞ்சோதியிளம்பரிதி தெற்கணைந்ததென்னப்பூத,நெருக்கமெழுந்தேர்கடவிநடந்து செவ்வேணிறைந்துகளைபொருங்கங்கைநீழ்காளிந்தி,விரித்ததி ரைநருமதைவாள்சிந்துகோதாவிரிதுங்கபத்திரிநீள்கண்ண வேணி, யருட்பொலிந்தபொன்னிமுதற்புனிதநன்னீராடியபி ன்சிவதலங்களடைவினேத்தி. (கங)

வட்டமதிப்பிளவெயிற்றுக்கொடியகாலன்மார்பெலும்புபடச் சிவந்தமலர்த்தாள்வள்ளல், கட்டேளிக்குமலர்க்குழலாளுடன் சேர்தானங்கருதியுறைமுனிவோர்கள்காணுந்தோறு,மிட்டசி லம்பரற்றிடுதாட்குகனைப்பூசித்தேத்தவிழிக்கடைக்கருணையீ ந்துசெவ்வேள், மூட்டிகழுங்காடுமலைதணந்துவாய்மைமுதிர்ந் தசுவைத்தமிழ்நாட்டின்மொய்த்தான்மன்றே. (கச)

வேறு.

வெளியநீற்றுமெய்யிடத்தினின்மானைவைத்திடுவோ
னளிசெயும்படிமாலெனவுருவுகொண்டனபோற்
குளிர்கெழும்புயல்விண்ணெழுந்தலைகடல்குடித்து
நளிர்பழுத்தருட்பொழிவதாய்நன்மழைபிலிற்ற. (கரு)

குணப்பெருங்கிரியன்னவர்கொற்றமாணிடர்பா
லணைப்பதென்னவான்றடவியகுன்றமீதணுகிப்
பணப்பெரும்பணிஞாலத்திற்பல்லுயிர்பசியா
லுணக்கல்சேர்ந்திடாதளித்திடவுவட்டெழும்வையை. (கசு)

குறிஞ்சியிற்புகுந்தேமகன்காட்சியாற்குறவ
ருறுங்களிப்பெழுஞ்சம்மந்தமெனக்கலந்துலவி
வறந்தபாலையின்மாற்றவளுருவுகொள்காளி
யுறைந்தவேட்டுவச்சேரியைச்சிறியங்குலைத்து. (கஎ)

முல்லையாயர்தம்பாடியைக்கலைத்திடைமொய்த்துப்
புல்லுமாநிலத்திழிந்துமால்பொன்னடிபோற்றிச்
சில்லையேசிறைகூட்டியதென்னவனெதிர்க்க
வல்லமாமகவான்பெருமருதமேபதைக்க. (கஅ)

உற்றுமாமணச்சோலையைப்பிடுங்கியேயுதறி
முற்றுநெய்தலுள்மூண்டபின்புன்னைகேதகையைப்
பற்றிநித்திலம்பொற்றகடெனத்திரைபரப்பி
மற்றவாழிக்குக்காணிக்கையிட்டிலாம்வையை (கக)

கமலமேவியுங்கலைத்திருமடந்தையைப்பரித்து
மமையுமாமணியேந்தியும்நான்முகமடைந்தும்
விமலமாயபொன்னிறம்படைத்தும்மறைவிளக்கித்
தமரவண்டுறைபங்கயன்றனைப்பொரும்வையை. (உ0)

வளைபொருந்தியதிகிரியையேந்தியும்வளர்பொன்
விளைதருங்கலைதரித்துமாமணியுரமிலைந்துங்
களிதுளங்கிடப்பல்லுயிரோம்பியுங்கண்ணிற்
குளிர்பொருந்தருள்கொழித்தமால்நிகர்த்திடும்வையை. (உக)

மானையேந்தியுமரவமேபுனைந்துவால்வளையாம்
பானிலாவணிந்தும்புவிப்பரப்பினுற்பாசு

தானணிந்துவெண்படிகமாமொளிபெறத்தரித்துந்
தேனலம்புகொன்றையையணிசிவன்பொரும்வையை. (௨௨)

துங்கவெற்பினிற்பிறந்துவேகங்கொளத்தொடர்ந்து
சங்கவெண்பிறைக்கோட்டினுற்றடங்கரைமுருக்கிப்
பொங்கர்சாய்த்தெழுபுடவிமேற்றுதிக்கைபெற்றரற்றி
வெங்கடம்பொழிகரிபொரும்விளங்கியவையை. (௨௩)

இத்தகைத்தமாவியாறுசூழ்கிடந்தமாமதுரை
முத்தவாணகைமுதல்விசேர்பாகனைப்பரவி
யத்தலத்தெழுநிருதியிற்குமரவேளணையக்
கொத்தெழுந்திடுவேதங்கள்பசுங்கிளிகூறும். (௨௪)

வெளியவாணிலாவிளங்கியபூதிசேர்மெய்யர்
களிதுளங்குதீக்கஞற்றியதூபமுங்கமுகுங்
குளிருமேகமேயொத்ததிற்குலவுவெண்பாளை
நளிரிளம்பிறைபோலிருநாற்றிசைவிளங்கும். (௨௫)

சூலுழைந்திடுசங்குகள்சொரிமணிநிலவங்
காலநீடியசேல்படுங்காலைமாமதியின்
பால்வளைந்தபாம்பெனுந்தடம்பங்கயமெனுந்தீச்
சாலவுட்புகமலர்சொரிதாழைகம்மியனும். (௨௬)

சிமையமார்பொழிற்சென்னியில்வேணியாமதன்மேற்
றமரவெண்சுனைகங்கையாந்தழைத்தவெண்பாறை
யிமைதரும்பிறைபுயல்பொடியெழுந்தமின்புரிநூ
லமையும்வெள்ளநீருத்தரீயங்கிரியரனும். (௨௭)

கண்ணருமகிழ்காட்சிசெய்துளங்களிதுளங்கித்
தண்ணருவரிதேக்கியதடவயற்சாலி
விண்ணுலாங்கதிர்கவரிபோல்விளைபரங்கிரியைத்
தண்ணுலாவியமழலைவாய்க்குமரவேள்சார்ந்தான். (௨௮)

வேறு.

இருளுடல்கிழிக்குமகரகுண்டலங்களெழுங் கதிர்பான்மதிமுகஞ்சேர், முருகவேளழகைவிழிவிருந்தருந் தமுனிவர்கள்காண்டல்செய்திருக்கத், திருவுளம்பற்றுஞ்சதங்கைகொஞ்சியசெஞ்சீரடிப்பூசனைசெலுத்தி, மருவெழும்பதத்தைத்தலையின்மேற்சூடிவலம்புரிந்தாடினர் துதிப்பார். (௨௯)

வெங்கொடுஞ்சூரன்காலனேசரணமேவுபூங்காலனேசரணந் துங்கருணருமெய்யனேசரணஞ்சோதிசேர்மெய்யனேசரணஞ், சங்கரிதரும்வாய்ப்பாலனேசரணஞ்சங்கரன்பாலனேசரணம், பைங்கடம்பொழுகுமுருகனேசரணம்பரங்கிரிமுருகனேசரணம். (௩0)

அங்கையில்வெண்ணெய்க்கண்ணனேபுகழுமாறிருகண்ணனேசரணம், பொங்கியநறைசேரம்புயாசனனும் புகழ்திருவம்புயாசரணந், தங்கியமணிப்பூண்களத்தனேசூளைச்சயங்கொளுங்களத்தனேசரணம், பைங்கறையெழும்வேற்காங்கையாசரணம்பரங்கிரிக்காங்கையாசரணம். (௩௧)

எனமுறைதுதித்துப்பணிந்தெழுமுனிவர்க்கெழிலருள்வழங்கியெங்குமரன், புனிதமால்வரையின்பாங்கர்வந்திறைஞ்சிப்பொங்குநீர்ச்சத்தியகூவந், தனையடைந்தெழுதாப்பழமறைப்பொருளாய்த்தழைந்திடுமந்திரமோதிக், கனைதருநீரின்மூழ்கிவேதியர்செங்கரத்தினிற்பொன்மழைபொழிந்து (௩௨)

மதிவிளிம்பிடறவழுதுகுத்துருண்டுவழிபடாப்பரங்கிரிக்கடவுளதிர்கழற்பாதப்பூசனைவிளைக்கவாண்டெழுநிறைபெறுந்திறலோர், முதிர்கறையூறுங்குடிமிவாளேந்துமுனைவராம்வீரவாகுமுதற், கொதிசெயுந்திறத்தபுயத்தரைநோக்கிக்குளிர்ந்துதம்பியசெவ்வாய்மலரும். (௩௩)

எந்தைதாள்பூசைக்கேற்றதுதருமினென்றிடவாங்கவர்விரைந்து, கொந்தவிழ்கடுக்கைகுளிரமொண்டிரைக்குங்கூவிளைமாத

விநீலம்,பைந்துணர்பூத்தசண்பகம் வெளியபங்கயநறியசெங்கு வளை, நந்துறத்தளவமல்லிகைதுளவநாற்றிடும்போதுகொய்தருளி. (௩௪)

நறுந்திரவியஞ்சேர்மஞ்சனந்தயிலநலம்பெறு பாலளைநெறுநய் வெறுந்தவத்துசுதனில்வடித்தருளிவிளங்கியகதலிமாங்கனிநீர்,குறும்பலவீன்றமுட்புறக்கனிதண் குறடுறுஞ்சியநறுஞ்சாந்தம், கறந்ததீங்கனிகளின்னனபொருள்கள் கரமலர்நீட்டிடவுதவி. (௩௫)

கடுவையுண்டருள்வோர்க்குணவெனவருக்கைகதலியுமனிச்சமாம்பூவிற், படுநறுங்கலையும்பணிகளுமமைத்தும்பரிமளப்புகையொடுதீப, மிடுமெழிற்பசும்பொன்பாத்திரமாதியேந்திடவரனவர்மகுடந், தடவிடச்சிவந்தனெனச்சிலம்பரற்றத்தத்தடிபயின்றதாட்குமரன். (௩௬)

செழுந்திருவேதமனுவினுற்கிரியாஞ்சிவன்பதபூசனைசெலுத்தியெழுந்துதியோம்பியியற்றியாயிரமாமெழுந் தமாமந்திரமோதித், தழைந்திடும்பசியகூவிளைநீலந்தருமலரிறைத்தடிபோற்றியெழுந்தெழுந்தன்போடிறைஞ்சிமூவலங்கொண்டேத்தியேயுவகையிற்குளித்தான். (௩௭)

வேறு

மன்பெருகிரிக்குநேரேவடகிழக்கணையபால
தன்பெயரிட்டவோடைவேலினுற்றந்துமூழ்கிப்
பின்பதன்சிறியவாயுப்பெருந்திசையிலிங்கஞ்சேர்த்தி
யன்பொடுகண்டோர்வேட்டலருளுகென்றுவாகித்து. (௩௮)

மறைமனுக்கொண்டொட்டாம்வரிசையாலருச்சித்தேத்தி
யிறையவர்திருக்கைமீதுயாணிழைத்தருளும்பூசைக்
குறைவிலாப்பயன்கொளென்றுகுளிர்ந்தநீர்பெய்துசெவ்வேள்
மறுவறுவருடமூன்றுமாதவமிழைத்தகாலே. (௩௯)

கரும்புயல்சிவந்தகஞ்சக்காடுபூத்தனையமாய
னரும்பவிழ்கமலச்சேக்கையண்ணலாதியருஞ்சூழத்

தரும்பனிமதியிட்டென்னத்தவளவாலெயிற்றுப்பேழ்வாய்
வருங்கணம்வளையத்தாதைமகிழ்ந்துமால்விடைமேல்வந்தான்.

வீறுசேர்பானுகோடிவிளங்கருஞ்சோதிதன்னை
யாறிரட்டித்தகண்ணாலருந்தியேபரவிச்செவ்வேள்
சிறடிநோவச்சூழ்ந்துசெய்யவர்ம்மழலைச்செந்தே
னூறிடக்கனிச்சிதாங்குமுத்தமற்பழிச்சுவானல். (சக)

வேறு.

முகையவிழ்ந்திடவிளரிவண்டுமுரன்றனைபங்கணைசிந்துவே
டகையவிழ்ந்திடநுதன்மலர்ந்தவதகுபழம்பொருடத்துவ
பகுறலைப்பணிகக்குநஞ்சுபதித்திடுங்களவெண்பொடி
நகுமெழிற்பெறவருபரங்கிரிநாதசேவடிபோற்றுவாம். (சஉ)

அளிமுரன்றிடுமிதழியந்தொடையணிதரும்புயவிமலவான்
குளிறிடுந்திரைநதியுடன்பிறைகுலவிடுஞ்சடைமுடியமர
முளரியண்ணலொடரிபுரந்தரர்முடிதழும்பிடுபதமுளாய்
நளிர்பெறும்பொழில்வளர்பரங்கிரிநாதசேவடிபோற்றுவாம்.

உலகமுந்தியவறுவிதம்பெறவொளிவிலாதெழவிரிசெய்தே
யலகிலம்புவிபிறவிகொண்டிடவருளருந்துணைவினைசமன்
மலிவிடும்பொழுதருள்பொருந்தினர்மலமகன்றிடுபிறவிதீர்
நலமெழும்பொருள்வளர்பரங்கிரிநாதசேவடிபோற்றுவாம். ()

தானுமேசதசத்தெனும்படிசத்தறிந்திடவரியதா
மூனமேயிருளாகிமூடிடவுற்றபானுமறைத்தகண்
மேனெடும்படலந்துடைக்கவிளம்புசற்குருவுணருமோ
ஞானமேவடிவளர்பரங்கிரிநாதசேவடிபோற்றுவாம். (சரு)

வேறு.

இன்னனபழிச்சியிருபதந்தடவியெழின்முடிபுவிதொடப்பர
வுந், தன்னிளங்குமரன்றனையெடுத்திறுகததழுவியேயுச்சிமோ
ந்திருத்திப், பொன்விழுதனையகற்றையஞ்சடிலன் புகன்றிடுங்
கருணையூற்றெழுந்த,பன்னிருவிழியாயுள்செயலதனைறப்பரவை
யினுவகைமூழ்கினமால். (சசு)

தேன்றுளும்பியதோர்தெய்வநூல்வடித்ததெளிவெனுமந்திரம் பலிக்க, மாந்தர்கள்வெருவிக்குருமுகத்துணருமாறுனைத்தவம் புரிந்திடவே, பாந்தண்மேற்கிடந்தபூமியினிழிந்துபரங்கிரிமரு வுவாயென்றே, மேந்திளங்கலசக்கொங்கையாள்பயக்கவிள மைபொங்கியவடிவெடுத்தோய். (௪எ)

இம்மனுமட்டோவன்றெழுகோடியிசைத்திடுமந்திரமனைத்து நம்மையுந்தனையுந்தெரிந்ததோர்குரவனவின்றிட வவன்செவி புகட்டித், தம்மனத்தெழுதியியற்றிடப்பயனைத்தந்திடுங்கூன் றிறைதவழ்ந்து, சும்மைசெய்பரவைவயிறுதிக்கொளுத்தச்சோ திவேற்பணிவிடைகொடுத்தோய். (௪அ)

எழுதொணுவேதமெடுத்தெடுத்தறைவோரேனையநால்வகைவ ருணம், பழுதறுநான்கினுச்சிரமத்தோர்பார்புகழிலிங்கிகளுட னே, முழுதுணர்தூயதந்திரத்தோற்குமொழிந்திடுமைந்தெழு த்துரித்தாம், விழுதுவிட்டெழுந்துதிசையொளிபுதைக்கவிள ஞ்சூசந்திரோதயமுகத்தோய். (௪கூ)

கற்றையங்கிரணமகுடகோடீரக்கட்வுளர்முனிவரேனையர்க்கு ம், பற்றியநெஞ்சம்வினைத்திடுமிந்தப்பரங்கிரிக்கந்தமாதனத்தி ன், முற்றியதெய்வக்கொடுமுடியதனின்முயலுதி யென்றதுவ ழாமை,யுற்றிடுதவத்தான்மகிழ்ந்தாங்கறையூற்றெழுக்கியசோ திவேற்கரத்தோய்: (ருo)

இன்னனகூறியிருளெடுத்துண்ணுமிளம்பிறைக்குருத்தினைச் சொருகும், பொன்னவிர்சடையான்வேண்டியவரத்தைப்புக லெனத்தந்தையைப்பரவிப், பன்னிருவிழியுங்குளிர்ந்திடப்பா ர்த்துப்பார்த்துநின்றிடுமிளங்குமரன்; றுன்னமுதொழுகத்து ளும்புதீங்கிளவிதொகுத்தவாய்மலர்ந்திதுகூறும். (ருக)

திருவுளத்தேருச்செய்கையையடியேன்செலுத்தியபிழைபொ றுத்திடுதி, மருவுளத்தோகைமலர்ந்திடப்பெறுதிமழலையுந்தெ ளிந்திடாச்சிறியேற் ,கருள்விழிப்பார்வைதினந்தினந்தருதிய

ன்பர்கள்விரும்பியபொருளைத், தரவிளம்பசுவின்கன்றினைத்
துடருந்தரயெனவிரங்கியவுளத்தோய். (௫௨)

தாரணிதன்னிற்றழுவிடாதவரைத்தழுவியகொடுமையும்வயிற்
றி, லாவல்வெம்பசியாலருந்திடாதவர்பாலருந்திய வினைமுதற்
பவமுந், திரவேபரங்குன்றடைந்திருந்திடுவோர்சிவகதியடை
ந்திடவேண்டுஞ், சூரரமகளிர்கழுத்தணிதாலிதுலங்கிடநஞ்சு
வாய்மடுத்தோய். (௫௩)

அய்யநின்னுருவம்விளங்கிடத்தாபித்தருச்சனைசெய்திடு மிலிங்
கந், துய்யகண்குளிரக்கண்டவர்தந்தைதூயதாய்குரவர்வேதி
யருக்,"கையமுற்றிளைத்தபவந்துடைத்தியற்று மருஞ்செயல்மு
டித்துவீடருள்வை, பையரவிணங்கியுறவுகொண்டாடப் பணி
மதிசூடுசெஞ்சடையோய். (௫௪)

என்றியம்பியதோர்குருதியூற்றெழுந்தேயிலகியசுடுமிவேலவ
ற்கு, வென்றிவேளுடலம்பொடிபடவிழித்தவிமலனுமவ்வர
முதவிப், பின்றனதுவகைபெருகியவிருப்பாற்பிதிர்படநமனு
டல்மிதித்தோ, னன்றெனவதிகவரந்தரும்பொருட்டுரவிற்று
வதுளதெனக்கிளத்தும். (௫௫)

சரவணப்பொய்கைகண்டவர்தருமஞ்சாருவர்தொட்டவர்பொ
ருளை, மருவுவருள்ளேகொண்டவர்காமமன்னுவர்மூழ்குவோ
ரெவரும், பரகதியடைவர்புத்திரகூவம்படிந்தவர்மைந்தரைப்
பெறுவர், திருவரைமூலைக்கும்பசுங்கொடிப்பழுக்கத்தினந்தின
ஞ்சுவைதருங்கனியே. (௫௬)

சத்தியகிரியைச்சேர்ந்தபின்மயிடன்றலைதனிலிருபதஞ்சேப்ப
வைத்தவள்முன்னுந்தேன்சுதித்திடவேமதுகரமிடறியதுளவ
ம், பொத்தியபுயத்துநாரணன்முன்னும்புனிதராய்வைகியஞ்
செழுத்தைச், சித்திதந்தருளவியற்றுவோர்பிறவிதீருவர்வேல
ணிகரத்தோய், (௫௭)

என்றின்வுரைத்துக்குமரனைக்கையாலெடுத்தணைத்திருத்திமா ல்விடைமேற், குன்றினின்முளைத்தகொடியுடன்மகிழ்ந்துகொ ண்டல்வண்ணத்தனுதியர்க,ணன்றெனமுனிவர்கணங்கள்சே விப்பநலங்கிளர்கைலையிற்புக்கான், மன்றலங்கனகமலர்மழை பொழிந்துவானவர்களிதுளங்கினரால். (௫௮)

இன்னனபுகழ்சேர்பரங்கிரித்தலைகமையியலறிவிண்ணவர்மு னிவர், மன்னியவிருப்புவளர்ந்திடவருவார்வந்தபின்பிரிந்தி டாதிருப்பர்,மின்னியவடிவேற்குமரன்வாய்மலர்ந்து விமலனை யேத்தியபனுவல், பன்னுவோர்செவிகொண்டமுதமேபோல ப்பருகுவோர்பெறும்பயன்கேண்மின். (௫௯)

அழலைமொண்டிறைத்துப்புழுங்கியகாட்டிலடுவிலங்குற்றதோ ர்துணுக்கம், வழுவுறுகொடுங்கோன்மருவியபொல்லாமன்ன வர்வகுத்தகண்கலக்கம், பழுதுறவயிற்றிலெரியிடத்துரத்திப்ப ரித்திடுங்கள்வர்செய்நடுக்கம், விழுமியதேனூற்றெழுந்தித்தி க்குமெய்த்துதிபழிச்சிடவாழ்வார். (௬௦)

மெய்க்கணைசுவறிநைந்துநைந்துருகிவிளைந்தநோய்கொண்டிடு ம்பொழுதிற், றுய்க்கவுமின்றிவறுமைவந்தடையிற்சூழ்மழைபி லிற்றிடாக்கொடுமை, மொய்க்கும்வற்கடத்திற்கயிற்படைவீசி மூண்டெழுமூசலிலிருண்ட,மைக்கறைகிடந்தகளத்தனூற்றுதி யைவழுத்துவோர்மனந்துணுக்கடையார். (௬௧)

புணர்ந்திடாமாதர்குடமுலைஞெமுங்கப்புல்லினும்பசிவயிற்றெ ரியக்,கொணர்ந்திடாவுணவையருந்தினுங்கொடுமைகொண்ட பாதகங்களையறுக்கு,மணர்ந்தபொற்றகட்டில்வெள்ளியந்தகட் டில்வளர்பனந்தகட்டினிலெழுதி, யுணர்ந்தகுஞ்சியிணிலணிந் தவர்நெஞ்சமுழுக்கும்வஞ்சகங்களைந்திடுவார். (௬௨)

மும்மையினிரட்டிகொண்டமாதத்தின்முறைபெறுதத்தமக் கேற்ற,செம்மைசேர்நியமமுடித்துப்பின்புனிதச்செல்வராயித் துதிவிரிப்போ,ரம்மகப்பெறுவர்பிணியினூற்றுன்பமடைகில

ரோருமதிகூறத்,தம்மனமகிழ்வார்செய்யவாய்மலர்ந்தசண்முக க்குரிசில்சொல்லெளிதோ. (௬௩)

அரியனோன்பிழைத்துங்காண்டகவரிதாமறுமுகவேலவற் கரு ளு, முரியதோர்தானத்திருவுருக்காட்சியுதவுதைப்பூசமாந்தின த்தில், வரியளியிடறமலர்முறுக்குடைந்தமதுவொழுகியநறுங் கடுக்கைத்,தெரியலான்செவ்வேள்சிறப்பியற்றிடுவோர்சிந்தை யில்விருப்பமெய்திடுவார். (௬௪)

சிறந்ததைப்பூசத்தினத்துவானுச்சிதினகரன்மருவியகாலை யறங்கெழுபுனிதசத்தியகூவமணிகெழுபுத்திரகூவ நறுந்தொடைக்கடம்பன்சரவணத்தடத்துநலம்பெறமைந்து பச்சறுகு, பெறுந்தலைமிசைவைத்தாடியஞ்செழுத்தும்பேசின ர்பெருமையாருணாப்பார். (௬௫)

மற்றையதலத்திற்கோடிகன்னியரைமறைசொடுவிளிம்பினில் வடுவைப், பெற்றநாவினருக்களித்தபேறதனைப்பெறுகுவார்கி டைத்திடவரிதா,யுற்றதைப்பூசத்திருவிழாக்காண்போரும்பரு ம்புகழுமிப்பதியிற்,பற்றிவாழ்ந்திடுவோர் பாசவேர்களைந்துபர கதியெளிதினிற்படைப்பார். (௬௬)

கங்கைசூழ்கிடந்தகாசியாதியதாங்கருதியதலங்களிற்புனிதம் பொங்கியதலமேபரங்கிரியுண்மைபுகன்றதுசவுனகசேட்டி மங்குல்சூழ்சிமையப்பரங்கிரித்தலத்தில்வந்தனைககணமிருக் தேகுந், துங்கனாத்தொடர்ந்துபுரப்பனேகுருநிதூற்றியகுடு மிவேற்கரத்தான். [௬௭]

ககனமாமுகடுபாய்ந்திடுங்குடுமிக்கதிர்பரங்கிரிக்கதைவினவி ப், புகுசெவியமுதமருந்தல்போற்களிக்கும்புனிதமாந்தவம் பெறுமுனிவீர், தகைமைசேருமதுபயனுணாப்பார்யார் சாற்ற லாலெமக்குமப்பயனே, வகைபலகிளத்தியென்கொலோவ தனில்வைகிடவாசைமிக்கெமக்கே. (௬௮)

தரணியிற்கிரேதாயுகத்தின்மெய்த்தகைமைச் சத்தியகிரியதாந் தி,மருவியதிரேதாயுகத்தினிற்சுமந்தவனமதாந்துவாபரமதனி

னிலகியபிரமவிட்டுணுத்துருவமெனப்பெறுங்கலியுகந்தன்
னி, லருள்வளர்குமாரபுரியெனுநாமமடைந்திடும்பரங்கிரிமா
[தோ.(௬௯)
முத்திசேர்பதியையடைந்திடுஞ்சிபிக்கோன்முயன்றபூதானத்
திலுய்ய, மித்தகைப்பதியின்கதையிலிச்சருக்கமிசைத்துளோ
ர்கேட்டுளோர்கங்கை, வைத்தபுத்தமுதமிளைத்திளங்குழவி
மதிவிளையாடுசெஞ்சடையோன், மெய்த்தகுகுமரன்கருணை
யையடைந்தேமேதினியுலகின்வாழ்ந்திடுவார். (௭௦)

மூன்றாவது குமரன்தவசுச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம்-௩-க்கு-கூடியதிருவிருத்தம் - ௱௬௯.

---

நான்காவது

## சிபிவேந்தன் பூதானச்சருக்கம்.



சுவைகசிந்தூறுஞ்செய்யுட்சூதனைவணங்கிநன்னூ
லிவர்தரும்பொருளையாய்ந்தசவுனகனியம்புஞ்செங்கோற்
புவிகெழுசிபிக்கோன்விண்ணோர்புகழ்பரங்கிரியிற்போந்து
நவைதவிர்வீடுபெற்றதென்கொலோநவிற்றியென்றான். [க]

என்றமாணவனைநோக்கியிமையவர்மகுடந்தாக்கித்
துன்றியேசிவந்துகாட்டுந்துணைப்பதம்படைத்தநந்தி
தன்றிருவுளத்திலோகைதருஞ்சனற்குமரற்கோதி
நன்றிசெய்கதையீதென்றுநலம்பெறுசூதன்சொல்வான். [உ]

இருட்பிழம்புடைத்துக்கையாலெடுத்தெடுத்தருந்தும்பானுத்
திருக்குலம்பொலியத்தோன்றித்திரைகடற்றனைவிக்குங்
குருக்கிளர்ஞாலமுற்றுங்குளிர்பொருந்திடவேநீதி
பெருக்கவோர்குடையினீழற்பிறங்கவேயரசுசெய்வோன் ௩)

மன்னிநட்பிழம்பைநக்குமணிச்சுடர்மகுடம்வேய்ந்தோ
னின்னமுதெழுந்தநாவினெல்லையினளவுகண்டோன்
றன்னுயர்களிற்றுல்மன்னர்தடமுடியிடறிமற்றை
யொன்னலர்துணியச்சோரியுதரிடுங்குருதிவேலோன். (ச)

பொன்னனூர்முலைப்பொற்கும்பம்பொலிந்துருண்டெதிரோ
பாயத், துன்னியகளபச்சேறுதுளும்பியமார்புகொண்டோ
பன்னகம்பரித்தஞாலப்பல்லுயிர்களிப்பின்மூழ்கத் [ன்
தன்னிளமகப்போலோம்பித்தழைத்தகாம்பீலிவாழ்வோன்.

இன்னனதகைமைகொண்டவெழிற்சிபிவேந்தன்ஞாலந்
தன்னதாக்கொண்டுநீதிதழையநீடூழிவாழ்ந்தான்
பின்னொருதினத்துணிதிபெருகுபுண்ணியநீர்தோய
முன்னியாத்திரைகொண்டேகமுயர்ச்சியினிருந்தகாலை. (கு)

வெண்ணிலாவெள்ளிங்காலவெண்பொடிதுளும்புமெய்யும்
பண்மறையோதிச்செப்பும்பதிந்தொளிபொருந்துநாவும்
வண்மைசேர்கருணைவெள்ளமடைதிறந்தொழுகுங்கண்ணுங்
கண்ணனினழகுசேருங்கவுதமமுனிவன்வந்தான். (எ)

போந்தமாதவத்துஞானப்புராதனமுனியைக்காண்பான்
வேந்தனுமெதிரேவந்துவிளரிபாண்மிழற்றும்வண்டு
தேன்றுளும்பிடக்கால்பாச்சுந்திருமலர்பதத்திற்பெய்து
சாந்தருக்கியநீர்தூபத்தகைமைகொண்டிறைஞ்சிப்போற்றி.

மகக்குழாமொருங்குசூழமனங்களிவட்டமீன்கற்பின்
முகைக்குறுமூரற்செவ்வாய்முலைக்குடஞ்சுமந்துவாடித்
திகைத்தநுண்மருங்குற்றேவிசிலம்புகல்லெனவோலிட்டுத்
தகைத்தகால்பெயர்த்துமேவத்தராபதிவலஞ்செய்தானல்.(கூ

இருளகக்கியசெஞ்சோதியெழின்மணிப்பீடத்தேற்றிக்
கரமலர்தூக்கிநிற்குங்காவலன்றன்னைநோக்கித்
தரணியிலொருகோலோச்சித்தழைந்துவாழியரோவென்று
பரமனையுளத்தில்வைத்துப்பதித்திமுனிவன்கூறும். (கo)

வருதிகிபிறந்தநாளின்வலியகோளிரவிபாம்பு
தனைமகன்வளைந்தார்கீதித்தருமனுகையினனீயு
மிரவடர்கதிர்போலெண்ணுதிருந்தனைதெவ்வர்க்கேற்பக்
கருவெடுத்துண்டுவாயிற்கறைதுளித்துதறும்வேலோய். [கக]

தருமமேதனித்தஞான்றுதக்கதோர்துணையதாகுந்
தருமமேபொருள்களுலுந்தந்திடும்வருணனுலுந்
தருமமெய்யாகச்செய்யுஞ்சமையமாறுடனேமற்றுந்
தருமமேகாக்கும்வேந்தர்தட்முடியிடறுந்தாளாய். (கஉ)

இளமையர்காளையானேரெழிலறுவிருத்தரேனும்
வளர்தருமங்கள்வேண்டுமெருவுகண்ணுடிதன்னுள்
விளையுளுந்துருளும்போதுமேனிமெய்யன்றுகாலன்
வளைவதுமறியாரந்தோமட்டெடுத்திறைக்குந்தாராய். [கங]

காமமேமுதலாருகுங்கள்ள்ர்பின்வழியேபோவர்
தாமனமெலியாரந்தோதருமமேநினையாரந்தத்
தீமையிலகப்படாததிறத்தினர்தருமஞ்செய்வார்
யாமகத்தவியூன்வானோர்வாய்மடுத்திடப்பாலித்தோய். [கச)

சொற்றிடுந்தருமந்தூலஞ்சூக்குமமெனவிரண்டாம்
பெற்றிமுன்னுரைத்தசெய்கைதன்னினும்பின்னர்க்கூறன்
முற்றிடவேண்டுமேற்றோர்நிரையத்தின்மூட்டுந்தூல
மற்றையநன்றுசோதிமணிமுடிசுமந்துநின்றோய். [கரு]

தங்கையிற்பொருளில்லோர்கள்செல்வரைத்தண்டித்தேனும்
பொங்கியதருமந்தன்னைப்புகன்றுசெய்விக்கவேண்டு
மிங்குநம்மனையார்கூறவெய்திடுந்தருமந்தெவ்வைக்
கங்குபேய்விருந்துண்டாடிக்களித்திடவகிர்ந்தவேலோய்.

சொற்றதுநுட்பமாகுமிருவருந்தூயநன்மை
பற்றிடுந்தானத்துள்ளேபயன்மிகுங்கன்னிதானங்
குற்றமில்கல்வித்தானங்குலவியபூமிதானங்
கற்றைபஞ்சடையார்க்குள்ளக்கமலத்தையுதவுந்தூயோய். ()

சுடரொழுபணியைப்பூட்டித்தோகையைத்தானஞ்செய்தோர்
படருமாஸைசயினாலேற்றோரிருவரும்பதுமன்வாழுந்
தடவுலகதிலோர்கற்பந்தங்கிநற்சாதியாகிப்
புடவியில்வாழ்வரென்றும்புகழ்திசையெழுதவல்லோய். ()

கல்வியினியன்றான்முன்னங்கழறியதொக்கும்பின்னர்ச்
சொல்விளங்கியபூதானந்தூயநற்காலநோக்கி
வில்வளைகுனித்தோனன்பர்வேதியர்க்குதவவேண்டு
மல்வினைக்குதவுதிண்டோண்மலையெனப்பொருமகின்றோய்

ஒன்றியநூற்றுப்பத்தோடெண்மர்தாரொருநூற்றெண்மர்
நன்றிசேரொண்மராதனலம்பெறுகுடும்பியாகத்
துன்றுயாகத்தோராற்றுந்தோயமார்பூதானத்தா
னன்றிருகதிர்சூழ்காலுநற்புகழ்நிற்கும்வேந்தே. (௨௦)

பாந்தண்மீக்கிடந்தஞாலப்பரப்பினிற்பூமிதானந்
தேர்ந்திடின்மேன்மையந்தச்செய்வினைசெல்லிலொன்றற்
கோர்ந்திடுதேவராண்டிலொவ்வொருண்டேறியீச
னூர்ந்திடுங்கைலைசேர்வரழகினான்மதனைவென்றோய். (௨௧)

என்றிங்ஙியம்பஞாலத்திறையவனுவகைமேவி
வென்றுசேர்தவக்கோனுக்குவேண்டுகொடுத்துப்போற்றி
நன்றெனமுனிவர்ப்போக்கிநயன்றசுற்றத்தார்மைந்தர்
தன்திருக்குறிப்பைச்செய்யுந்தகைமையினமைச்சர்சூழ (௨௨)

வான்கெழுபசும்பொற்காசுவகுத்தசாளிகைகள்மற்றுங்
கூன்களக்கறட்டுவென்சேரொட்டகங்கொணர்ந்துபோற்றத்
தேன்கிளர்வேதமோதுஞ்செழுந்தவராசிகூறக்
கான்கிரிபலவுந்தள்ளக்ககனமாலிரதமூர்ந்தான். (௨௩)

வெண்ணிலாக்கற்றைதூண்டவெளியநீறணிந்தமெய்யுங்
கண்ணகண்டிகைத்தார்பொன்னூல்கலந்துகம்பிததமார்பும்
பண்ணெழுகுதலைச்செவ்வாய்ப்பசுங்கிளியிருந்தபாகத்
தண்ணலைப்பழிச்சுநாவுமாகிவந்தேகுங்காலை, (௨௪)

வேறு.

கங்கைசூழிட்டகாசிவான்புகழுங்கயைபிரயாகைதன்சோ
ஊண, பொங்குநீர்ச்சிந்துவாகினிவேணிபொலிந்தகோதாவிரிபு
ணிதந், தங்குகோதமைதூகருமதைதுங்கபத்திரிதழைதருசுலி
ங்க, நங்களுமாற்றுநைமிசாரணியம்வரகதிசத்தமசங்கம் (உரு)

தரைபுகழ்பார்வதேச்சுரம்விசாலேச்சுரம்விமலேசம்விண்முக
டு, மருவுபற்பதஞ்சேர்தருகுகாரணியம்வருமயிராபதேச்சரம்வீ
டருளியபருப்பதேச்சரம்நீதியருடிரியம்பகங்காஞ்சி [ரியே
யுரைசெய்காளத்திவேங்கடமோத்தூரொளிதிக ழருணையங்கி

சத்தமார்கோதாவிரிகொள்காஞ்சியெனதகுவிருத்தாகிரிகாழி
மூத்தர்சூழ்தில்லையெழில்கொள்சாய்க்காடு மொழிந்தபுள்ளிரு
க்கும்வேளூர்சீர், தத்துவெண்காடுகாவிரியிருபாற்சங்கமத்து
றைநன்மரந்துறைசீர், வைத்திமிம்பொன்னியந்துறைமத்தியா
ர்ச்சுனஞ்சண்பகாடவியே. (உஎ)

மருவெழுமாரூர்மறைவனமாலவனமொடுமொதவிவனம்பூந்
தருவளர்பஞ்சநதியுடன்சம்புத்தகையிராமேச்சுரமூதூர்
திருவளர்பலவாஞ்சிவதலம்பரவித்திரைபொருபுனிதநீர்கு
டைந்தே, யிருநிலம்பழிச்சுங்கூடலெம்பரனையேத்தியேநிரு
தியிற்படர்ந்தான். (உஅ)

கருமுகிறவழ்ந்துவயிறுளைந்தீன்றகதிர்மணியெனச்சிதறருவி
சொரிதரவோங்குஞ்சுடர்ப்பரங்கிரியைத்தூய்விழிகுளிர்ந்திட்
நோக்கி, யரகரவெனவாய்மிழற்றமாமுடிமேலங்கையைமுகி
ழ்த்துமேவியகா, லிருசிறைப்பசியகிளியெடுத்திசைக்குமிருக்
குணாசெவிப்புகுந்தனவால், (உகூ)

வேறு.

இந்தகையபரங்கிரியிற்போந்துவேந்தனிளநிலவுபொழிந்தமு
தமெனவேதாவித், தத்தலைசிகரந்தெறிப்பக்குளிர்ந்துபொங்கு
ஞ்சரவணப்பூந்தடங்குடைந்துதமிழ்போலூறி, மொய்த்தசு

வைச்சத்தியகூவத்தின்மூழ்கிமுளைத்தசுளிர்ப்புத்திரகூவத்தி லாடி, வைத்தபழஞ்சுருதிமனுவுரைத்துவேதாவலர்கரத்திற்ப சுங்கனகமாரிபெய்து. [கூ0)

வேறு.

வயின்வயினுறையுமுனிவரைப்பணிந்துவழுத்துகாலாசிகள் கூற, வெயில்விசும்பளக்குஞ்சினகரம்புகுந்தெம்மீசனைக்குமர னைப்போற்றிப், பயின்மறைக்கோயிற்புறத்துறக்கோடிமாண வர்பரவுமாறகண்டன்,கயிலையெம்பரமனென்றிடப்பரவிக்கசி ந்துநெக்குருகியேதுதித்தான். (கூக)

அப்பொழுதரியமாதவராசியறைந்திடத்தீர்த்தயாத்திரைசேர் துப்புறழ்சடிலமாதவர்பாதந்தொழுதபின்மகதிவீணையைக் கொள், செப்பருங்கரமுமொப்பிலாச்செவ்வேள்சிறடிபழிச்சி யநாவு, மெய்ப்புறமருவ்நாரதன்றலத்துவீறதுவேந்தனுக்குரை ப்பான். (கூஉ)

இமிடிரைப்பரவையுடுத்தஞாலத்திலித்தலம்புனிதமா முலகி னமைதருதீர்த்தந்தன்னிலித்தீர்த்தமதிகமாம்வினையைநற் பொருளைத், தமையுணர்பெரியோர்கூறியசிவமேசத்தியந்தத் துவம்பரமென், றமைதருபெயரிற்சத்தியகிரியதாமெனநரப திதுதிப்பான். [கூகூ)

குருதிபொங்கியமுக்குடுமிவேற்கரத்தன்சூல்வுமைந்தொழில் களைக்கதிர்முன், வருசெழுங்கமலமெனநிறைந்தியற்றிமண் முதலைந்துமேமாய்ந்திடினும், விரிதருங்கிரணங்குறைபடாதோ ங்கிமேவுமண்டலங்களுக்கப்பாற், பரவியோடுவுமடிமுடிப டையாப்பரங்கிரிக்கடவுளேசரணம். [கூச]

இன்னனதுதிகள்நாவிளிம்பிடறவியற்றியேகிரிவலம்புரிந்து மன்னனோர்காவிலிருந்துதேர்ந்திடுவான்மருகுகேதாரமேசே துப்,பொன்னவிர்தலத்திற்புனிதமிப்பதியிற்பூசுரரொருவரை ப்பதித்தாற், பன்னுசத்தியலோகத்தினிற்கோடிவேதரைப்ப தித்ததென்றுணர்ந்தான். [கூரு]

சுட்ர்விடுகொடிஞ்சித்தேரினைக்கட்வுஞ்சூதனைநோக்கியே வேந்த, னடமிடுதிரைவான்கங்கைசூழ்கிடந்தநலம்பெறுகா சியின்மேவிப், படருமைஞ்ஞூறுவேதரைத்தெரிந்துபணிந் துநீயிப்பதித்தகைமை, மடமறவோதியழைத்துமான்றேரில் வைத்திவண்கொடுவருகென்றான். (௫௬)

அன்னவன்போதமீண்டிடுமுன்னமமரர்கம்மியன்றனையழை த்துப், பொன்னெழுபதியிற்சகத்திரப்பாதிபூசுரர்மாளிகையக ரந், தன்னைநீபுரிதியென்னவேயவனுந்தக்கதோர்சுபதினம்பா ர்த்து, மன்னுநூற்படியீரொட்டெனவழிசேர்மாளிகைபலவித ஞ்சமைத்தான். (௫௭)

வண்டெழுங்கமலமகிழ்மனைவாழ்வுமாற்றிடாதென்றுமே பொலியக், கொண்டதோர்கருவியில்விடத்தேற்றிக்கோனெ ழுந்துலவியகாலை, யெண்டிசைபுகழுந்தேரினைக்கண்டானிழி ந்தவைஞ்ஞூறுவேதியர்கள் கொண்டமாமகத்துநீறணிநுதலுங் குலவியகண்டிகைமார்பும். (௫௮)

இன்னணமருவுஞ்சோதிமெய்யினரையெதிர்கொடுவந்தனைபு ரிந்து, மன்னவனிருகண்குளிர்ந்திடநோக்கிமணிமுடிதுளக்கி நீர்மருவ, முன்னரோயிழைத்ததவமெனமறையோர்முகமலர்ந் தாசிகூறிடவே, யன்னவரொடுவானளவிடவோங்கியழகெழு ஞ்சினகரம்புக்கான். (௫௯)

புக்கமன்னவனும்வையைநீர்பரந்துபுகல்சதுர்வேதமங்கலமா மிக்கநன்னிலத்திற்பாதிகோயிலுக்கும்விளம்பியபாதிவேதரு க்கு, முக்கணன்குமரன்முன்னர்செய்தானமுயற்சியாற்கடவு ளின்காட்சி, இக்கணம்வேண்டுமெனமறையோர்கையேறமந் திரப்புனல்பெய்தான். (௬௰)

பெய்துபோந்திடுங்காற்படர்வழியொழுங்கிற்பிறங்குமோர் வேதியற்காணான், வெய்துயிர்த்தழுங்கியம்மவோமுன்றான் மேவியகொடுவினைத்துடக்கோ, வெய்துமிப்பிறப்பிலிழைத்த

தோயார்தேரவென்செய்கேனேதுகாரணமோ, மெய்தருவார்
போல்விரித்தசங்கற்பம்விழுந்திடவிதித்தவாறேயோ. (சக)

ஈங்குறுமுனிவோரில்லறந்துறந்தோரெழில்பெறுமட் விபுக்க
வரொன், ருேங்கியதோளானைந்துநைந்திரங்கியுருகினுன் விம்
மிநெட்டுயிர்த்தான், றேங்கியவிழிநீர்மார்பினிற்பொழிந்தான்
றிருமுகம்வாடினுன்றேம்பி, யேங்கிநெஞ்சயர்ந்துவிழுந்துக
ண்டயின்ருனெழிற்கனுக்கண்டெனெழுந்தான். (சஉ)

வரையொழுக்கருவிநான்றெனப்புயத்தில்வளைந்தவுத்தரியவெ
ண்பட்டு, மிருவருவெடுத்துத்தக்கன்மாமகத்திலிடுக்கண்வந்து
ரைத்திடுங்கதிரோன், புரையவல்லிருளைக்கிழித்தகுண்டலஞ்
சேர்பொலன்கெழுகுண்ழையும்வெண்டசட்டிற், சரியமாமணி
போற்கௌவியசாந்தங்கமழ்த்தியநீறணிநுதலும். (சஙூ)

பணிசெயுங்கூட்டப்பத்திரன்றனக்குப்பலகையிட்டிடவெடுத்த
துபோ, லணிகொளவீக்கும்புத்தகமமைத்தகவளியையணைத்
தசெங்கரமு, மணிகொள்கண்டிகைத்தார்வைத்தமாமுடியும
திபொருவதனமேலெழுந்து, திணியிருளொதுக்குங்குறுநகை
நிலவுஞ்சிறந்தருள்சிவன்றனைக்கண்டான். (சச)

போந்திடுந்தந்தைதாயொடுதமையன்பொலங்கெழப்பின்பத
ம்பெயர்த்துத்,தேன்றுளும்பியசொற்செய்யவாய்மலருந்திருநு
தற்புண்டரக்கீற்று, மேந்துபொற்புரிநூன்மார்பமுங்குளிரை
யெடுத்திரைத்திடுமதிமுகமும், வாய்ந்தழகொழுகப்பரங்கிரிக்
குமரன்வந்ததுங்காவலன்கண்டான் (சரு)

கண்டதிசயித்துவிழிகுளிர்ந்திடவேகடவுளர் பதங்களைப்பரவி
விண்டுமென்மயிரின் முடங்கறநடுக்கிமின் னெனமணிமுடிது
ளக்கி, மண்டலமிழைக்குந்தவப்பெரும்பேறேமதியிலேனுற்
றியதவமோ,துண்டவெண்பிறையைமிலைந்தவனனையரிங்கண
ந்தோற்றுதற்கென்ருன். (சசூ)

என்றபினெவ்வூரெப்பெயருனாத்தியென்றிடவேதனுய்வரு வோன்,வென்றிசேரொன்னார்வல்லுயிர்குதட்டிவிழுங்கிடவா ள்விதிர்த்தவகே, ளொன்றியநம்பேர்பரங்கிரிப்பரமனுலகினி ற்பதியெலாந்திரிவோ, நன்றிசேர்தலத்துப்புனிதமீதெனவே நாமுமிங்குறைந்திடவந்தோம். (சஎ)

எனுமுறைசெவியிற்புகுந்திடக்களித்தேயெழுந்துகாம்பிலியா ள்வேந்தன், பனிமலர்தூவித்தூபதீபத்தாற்பலவகைமுகம னுங்கிழைத்துப்,"புனிதநீர்வாங்கிநம்பரனுவகைபுரிந்திடக்கட் வதென்றுரைத்து, மனமகிழ்ந்திறைவன்றிருக்கையிற்பெய்து வணங்கியேயிருகைகூப்பினனால், (சஅ)

அப்பொழுதவருமாசிகள்கூறியணிமதிளுடுத்தமாளிகையுட் டுப்புறுகனிவாய்ப்பன்னியரொடுபுக்கிருந்துதொன்மறைவழி நடாத்திப், பைப்பணியணிந்தோன்குமரவேள்கோயிற்பதிந்த னன்வேதியர்வாழ்ந்தா, ரிப்பதிதனிற்பூதானமேன்மையினு லெழில்பெறுஞ்சிபியெனும்வேந்தன். (சகூ)

மிதுலையிற்பிறந்தகிளியொடும்பச்சைமேனியான்வழுத்தியசே து,முதலவாம்பதிகள்காண்டகவுற்றுமுனைமதிக்கோட்டினைம ழுக்குங், கதிரொயிலுடுத்தகாம்பிலிநகரங்கடிதணைந்தொருகு டைநிழற்கீட், குகிர்குதிர்த்திடவேபுவியையாண்டேழிகோமு றைபுரிந்திருநாளில். (ருo)

கொய்யுளைப்புரவிமதங்களையாற்றிக்குலவியகைலையையடை ந்து, துய்யநீடூழிவாழ்ந்துநம்பரமர்துணைப்பதமலரினிற்கலந் தான், வையகம்புகழும்பரங்கிரியதனின்மருவியோர்தினமி ருந்தோர்கள், வெய்யவெம்பவத்தைத்துடைப்பரென்றுலவ் வேந்தன்வீடடைகுதலரிதோ. (ருக)

சு-வது-சிபிவேந்தன்பூதானச்சருக்க

முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-சு-இ-கூடியதிருவிருத்தம்-உசச.



ஐந்தாவது

# பிரமகூவச் சருக்கம்.



நூலெனுமளக்கரையளந்துமகிழ்சூதமுனிநுண்பொருளுணர்ந்ததகைமைக், கேலவளர்சவுனகமுனிக்குழாகிளத்தியிடுமெய்மெய்தவக்குரிசில்கேள், காலனுருளும்படிசிவந்தபதபுண்டரிகர்கந்தருறைசத்தியகிரிக், கோலிடுகதைக்குள்வினவக்கொடியவல்வினையுடைத்தகதைசொற்றுதுமரோ (க)

பண்டெழுதிருச்சுருதியின்பொருள்வழாது தொழில்பற்றியவறம்புரிகுவோன், மண்டலமெடுத்துரைபழிச்சமனைவாழ்வினில்வதிந்தருளொழுக்கமிகழான், எண்டகையவீன்றவர்தமைக்களிதுளங்கிடவியற்றியடிமைச்செயல்கொள்வான், றெண்டிரைகுதித்துலவுகோதமிபெருங்கரைசிறந்திடவுறைந்துவளர்வோன். (உ)

கூனல்விளையுந்திரைநிரைத்துவருகுண்டகழிகொண்டதொர்வளாகமதின்மேற், றானலமிழைத்துவளர்காலவனெனும்பெயர்சுமந்தவனிடத்தொருதொல்லோன், வானவருளஞ்சிறிதுருக்கவுயர்மாதவம்வகுத்ததேவத்துதிவரத், தேனுளமதுச்சிதறுமாமலர்சொரிந்தடிசிரங்கொளவணங்கியறைவான். (ங)

இல்லறம்விளைந்துபயனிங்குவரவெந்தையினியின்றெனதகத்துணைவெனுந், சொல்லறையவன்னவனுநன்றெனவிருந்துசுவைதுய்த்தவனிருந்துமகிழ்காற், பல்லவகையாமொழியுரைத்ததிசயம்பெருகுபாரிலெழுநீருளதில்வீ, டொல்லையுதவும்புனிதநீர்முழுகியெங்கணுமுலாவுதேவத்துதிசொல்வான். (ச)

பால்வெளியநீறுதவழ்நெற்றிபெறுகாலவபடர்ந்துதிசையெங்கணுமுலாய்ச், சீலமெழுநீர்பலகுடைந்துளமிகப்புனிததீர்த்தமிசையக்கழறுவோங், கோலியகேதாரகிரியிற்சளிர்துளும்பியெழில்கொண்டுலவுபுட்கரமுடன், சாலவுதவும்புனிதகாசிமணிகர்ணிகைதடங்கொள்பிரயாகையதனில். (ரு)

வேறு.

சேனுதவக்கொடியினைவேர்தடிந்தவேணித்தீர்த்தமதன்பாங்கரபித்தீர்த்தம்வீடு, காணவனற்குதவுவன்னிதீர்த்தம்பூத்தசமலமலர்துன்றுசத்தாரணியத்தாதி, மாணெழில்சேர்குளிர்கிடக்கும்பிரமதீர்த்தம்வளராலவனங்குகாச்சிரமங்காஞ்சி, நாணுலவும்வேகவதிவினையின்சோதிநகுமாளவியத்திரவிநாமதீர்த்தம்.

பைம்பொனெழுங்கனகசபைவிளங்குந்தில்லைப்பதியிலெழுஞ்சிவகங்கைபகர்வெள்ளைகாட்டிற், கும்பிதவிர்த்தருள்காயத்திரிநீள்சோலைக்குளிர்சாயாவனங்குலவுசாயாதீர்த்தஞ், செம்பதுமம்வதிந்தவிடைமருதில்வானோர்சிறந்துளக்குமூத்தீர்த்தஞ்சென்னிவான்றோய், வம்பவிழும்பொழிற்குடந்தையெதிர்ந்தபொன்னிவளர்கன்னிகாதீர்த்தமதியோய்கேட்டி. (எ)

கூனெயிற்றுவாயரக்கனுயிரைமென்றுகுதட்டிவிழுங்கியகணைக்கைக்குரிசிறூண்டுந், தூனலஞ்சேர்தனுக்கோடியுடனேசேதுத்துலங்குமிலக்குவதீர்த்தஞ்சுடிகைப்பாந்தள், கானுலவுஞ்சேக்கையெனக்கிடந்தோர்சீர்த்திகனிந்துவளரனந்தபுரங்காணுந்தோறும், பூனலமேவியதருமந்தழுவுந்தூயபொருனையலைமணிசிதறும்பாவநாசம். (அ)

இதன்புடையிற்கிடந்தரற்றுமத்திதீர்த்தமெழிற்கோளந்தனிற்பாண்டுதீர்த்தமியானை, மதம்பெருகியளறுசெய்யமறுகுதோறும்வரிநெடுங்கண்மடந்தையர்கள்மகிணர்தோளிற், பதஞ்சிவக்கவைகியப்பாற்படருங்கூடற்பதிவளையக்கிடைந்திரைத்துப்பாரைக்கீண்டு, முதிர்ந்தசுவைத்தமிழ்தெரிந்துகுடக்கமேறிமுத்தெடுத்துச்சிதறுதிரைமுழங்கும்வையை.

வேறு.

இப்பதிக்குநிருதிதிக்காய்ப்பாதியோசனைமருவியிலங்குந்தானமைப்புயல்கண்டுயில்சோதியச்சுமந்தவனமதனுண்மருவுபொன்னூற், றுப்பனையதிருமேனிதடித்துருண்டசெக்கரொனத்துலங்குஞ்செவ்வேள், செப்பருமாறெனுந்தலத்துண்முதற்பதியாய்ப்பரங்கிரியின்சிலம்புண்டாமால். (கo)

விண்ணவர்மாதவர்குடையும்பரங்கிரிக்குவடபாலாய் மேவுந்தீர்த்தந், தண்ணெழுசத்தியகூவம்பனியினுமெல்லியகூவந் தனக்குக்கீழ்பா, லண்ணியபூவின்மெலியகூவமதன்கிழக்க தாய்நவின்றழும்மை, யெண்மருவுவயித்தியசாரக்கூவமென்ப துவிண்ணெழுந்ததிங்கள். (௧௧)

ஐந்துருகுஞ்சயரோகமையகற்றுமவர்நன்னீரைநண்ணியாடி னொந்தெழுந்தபிணியகற்றவயித்தியதீர்த்தப்பெயரானுவன்ற தாகு, மந்தணெழுஞ்சரவணப்பூம்பொய்கைகண்டோர்பிணி பாவமடக்குநீர்தோய்ந், தெந்தைதனைப்பரங்கிரிவேலனைக்க ண்டுமூன்றுவைகலிருந்தநாளில். (௧௨)

தென்னவர்தங்குலத்துதித்தகோவிதாரத்துவசன்சேனாவு ங், கன்னியெயில்புடையுடுத்தவிசாலநகர்வைகிடுவோன் கட ல்வளாகத், தின்னல்வளர்குறும்பெறிந்துபைங்குருதிகொப்ப ளிக்குமெஃகவேலோன், பின்னுதிரைக்கட்பூமிகுளிர்தூங்க வொருகுடைக்கீட்பிறங்கவைத்தோன். (௧௩)

இன்னவாண்டகைக்குரிசில்கோயில்கடைப்புறத்திலெடுத்தெ டுத்துத்தூற்றும், பொன்னிவருஞ்சோதியொடுவெண்டவள ச்சோதிபோற்பூதிபூத்து,மின்னியெழுங்கண்டிகையாங்கொத் தெழுந்ததிருமார்புவிளங்கப்பூண்டு, துன்னுமியல்மாணவரோ டகத்தியமாமுனியெதிரேதோற்றுங்காலை. [௧௪]

போர்வேட்டுமெத்தமெத்தவீங்கியெழும்புயநிருபன்பொலிந் தபீடஞ், சீர்வேட்டசெல்வத்தரல்விழிபுதைக்கப்பட்டனையா ன்றிருப்பாதத்திற், கார்வேட்டசெங்கைகொடுமலர்தூவான்ப ழிச்சியிடான்கையுங்கூப்பான், பார்வேட்டபுயன்வாளாவை கினனென்றருண்முனிவன்பார்த்தபின்னர். (௧௫)

முன்னொருநாளிந்திரனைவிடாத்தூவுமுள்ளெயிறுமுளைக்கும்பா ந்த, ளெண்ணவுருவம்பெறுதியெனச் சபித்ததிருவாயானெழி ன்மாணுக்கர், துன்னிடவேமுன்படரும்பிரமிட்டன்றனைய

ழைத்துத்துரிசுபூத்த, வன்னவனுளகந்தைகெட்க்குட்டநோ
ய்பெறச்சபியென்றறைந்துபோனான்.	(கசு]

இருசெவியிற்புத்தமுதம்பொலிந்ததெனயரவோருமிருக்கமா
ந்தி, யருள்சுரந்தகுருவுரையைவழாதியற்றவேண்டுமெனவகத்
துணடி,வருதியொருபொய்வாழ்வைமதித்திருந்தவகந்தைபெ
றுமன்னகேட்டி, திருவழகுகெடக்குட்டங்கோடியெனச்சபி
த்திட்டான்சிறந்ததூயோன்.	(கஎ)

அக்கணத்தின்மேனியெல்லாங்குட்டநோய்வளர்ந்திடவேயந்
தணாளர், சுக்கிலவெண்ணீறணிந்தமெய்யெதிர்க்கச்சாருபந்
தோன்றல்போலு, மிக்கரசன்வரம்பெற்றேயெந்நாளுங்கஞ்சு
கமாம்வெண்பட்டாகும், புக்கதிருமாமிவிழிபெற்றவற்குமாமி
விழிபொதித்தன்மானும்.	(கஅ)

கைக்கொடையாற்குன்மேகம்வெருண்டதெனவெண்கார்
போற்காட்டல்போலுந், திக்குலவுந்திருமேனிவற்புறத்ததிரு
மேனிசேர்தல்போலு, மைக்கருங்கண்மணிமூரல்மாதர்மயல்
கொண்டிடவேவருவோன்மேனி, புக்கதொருவெளியகுட்ட
மெங்குமெழுந்ததுபார்த்துப்புகல்வதானான்.	(ககூ)

என்னேயென்னேயிதுநோய்கொள்வதற்கோவுடலெடுத்தே
னிளமைச்சோதிப், பொன்னேருமுடலழகுபோயதுமெங்
கோமற்றைப்புட்விவேந்தர், சொன்னேரப்பழிமொழிகள்கூ
றுரோநகையரும்பித்தொண்டைவாயார்,கொன்னேரும்வாள்
விழியின்பார்வைவெறுத்தேயிகட்சிகொண்டிடாரோ.	(உ0)

உயிர்சிறந்துமிறந்தவன்போலாயினேன்மன்னரொல்லாமுவந்
துநிற்கச், செயிரறுபொற்பீடிகைமேலிருந்திடுங்கோநாணுது
திரிகோவந்தொ, வெயிலுடுத்தவிசாலைபுரியினிதாளவொரும
கவுமிலேயேயென்று, வெயில்விடுமாமணிக்கலன்சேர்மார்புரு
ளக்கண்பனித்துவேந்தன்பின்னர்.	(உக]

திரையதிருங்கடலேழுமுழுந்தமிழுந்துளியாக்கிச்செவ்வாய்க்கிட்ட, குரவனைச்சேர்மாணவனும்பிரமிட்டமுனியிரக்கங்கொண்ரக்கூறி, யிருபதத்தைப்பிடித்தழுதுநைந்துநைந்துநொந்திரங்குமெல்லையந்த, வரமுனிவனருள்சுரந்துமனமிரங்கிப்பொறைமருவிவாய்மைகூறும். (உஉ)

கீதவண்டுகிண்டியதார்கோவிதாரத்துவசகேட்டியாலுன்,மீதுவெகுண்டிடுகோபந்தணிந்ததினியுனதுசுட்டவினைகடிரக், கோதகன்றபுவியோம்பியரசுரிமைசெயநாமேகூறுமுண்மைநீதிறங்கொண்டிருசெவியிற்புகட்டுதியென்றருண்முனிவனிசுழ்த்துவானல். (உங)

வேறு

கூன்கிடச்குமுதுகுடையமதியைவேய்ந்தோன்கூடலுக்குநிருதிதிசைகொண்டுநீடுந், தேன்கிடக்குஞ்சோலைவளர்பரமர்வெற்புத்திகழ்மறையோர்பூதானஞ்சிபிக்கோன்கண்ட; வான்கிடக்குங்கம்மியனுர்வகுத்தவீதிமாதானபுரம்பரமவரைக்குவாய்த்தான்கிடக்குந்திசைவில்லுநானூறுகத்தனைகிடக்குமெல்லையயன்றந்ததீர்த்தம். (உச)

வெண்டவளச்சோதிபெறும்பெருநோய்நிரவிதிவகுத்ததொக்குமதிவிளையுந்தொன்னூல், கொண்டெடுத்துக்கூறுவதுமாகுஞ்சிந்தைகுழைந்துவந்துநீரடும்பிரமகூவம்,வண்டடைந்துகுமுறுமிதழ்வெளியகஞ்சமாளிகையாண்மணம்புரியமலரோன்செய்த, வொண்டகையாற்கலியாணகூவமென்றுமுனைப்பர்திசைபுதைத்தபுலாலுலவும்வேலோய். (உரு)

வேறு.

முளறியான்றிருமணமுயலவெய்தியே
களிபெறுபரங்கிரிக்கற்பகப்பெயர்
விளைகொளைங்கரன்றனைவேதமந்திரத்
தளியுழுமலர்பொழிந்தருள்பெற்றனரோ. (உசு)

மலர்திகழ்சேக்கையான்மலர்கவேியே
பலர்புகழ்குடதிசைபார்த்துமாதுட

ணிலகியதிகிரிசங்கேந்துமாயனைக்
குலவுபூசனைதுதிகொண்டுபோற்றினன். (உஎ)
நீலொளிதுளும்பிடநின்றதுற்கைதான்
வாலெயிறதுக்கியவாய்நிசாசரர்
சாலவுந்துதித்திடமயிடற்சாய்க்கவே
கோலவொண்பரங்கிரிக்குழகற்போற்றியே. (உஅ)
கற்பகநாட்டினிற்கழறுமும்மைசேர்
சொற்புரிவருடமுந்துாயநோன்பினை
யற்பகலிழைத்திடவாதிநாயகன்
மற்பொலிவிடையின்மேல்வந்துதோன்றினன். [உகூ]
வரம்பலகேளெனமருவுதுற்கைதான்
விரும்பியதுரைத்திடவேதநாயக
னிரம்பவஞ்செழுத்துபதேசம்நீலிக்குத்
தரும்படிசெய்துபின்மகிழ்ந்துசாற்றுவான். [௩0]
பற்றியகுகன்முதற்பதியதாகியே
யுற்றவித்தலத்திடையூறுதீர்த்துநீ
நற்றவர்புகழ்நடுநாயகம்பெறக்
கொற்றவேற்குமரவேள்கோயில்சேரென்றான். [௩௧]
அத்தகைவலியினலவனைவீட்டியே
மெய்த்தருமவன்றலைமிதித்துநாப்பணுய்
வைத்தருள்வடதிசைநோக்கிவைகிய
வித்தகிபூசையையேதன்முற்றினன். [௩௨]

வேறு.

பிறைதவழ்சடையான்பூசனைபுரிந்துபெரும்புகழ்வேலவன்ப தத்தி, லிறுகியமுறுக்குநெகிழ்ந்துகிண்கிணிவாயெனவரும்ப விழ்ந்தபூத்தூவி, மறுவிலீரெட்டாம்வரிசைகொண்டேத்திம ருவுசெவ்வேள்விடைகொண்டு, குறுநகைச்செவ்வாய்வாணி யைமணந்துகுறைவிலாவுவகையிற்குளித்தான். [௩௩]

தூயதண்டுளிசேர்பிரமகூவத்தைத்தொட்டதின்மாதுடனுடி மேயநீர்கொண்டுதருப்பணவிதிகள்விருப்புடனியற்றியே பிர

மன், சேயிதட்கனிவாய்வெண்கிளியுடனேதிருப்பரங்கிரிவல
ம்படர்ந்து, பாய்பசுங்கனகத்தேரினைக்கடவிப்பண்டுறையுல
கமெய்தினனால். [கூ௫]

இத்திறம்பொலிந்தமூழ்குவோர்வாழ்வுமிறுதியில்வீடுமேயுத
வு,மெய்த்தகுபிரமதீர்த்தமுற்றுடின்மேனிவெண்குட்டநோய
கன்று, கத்துநீராழிக்காசினிபுரப்பைகாவலகேண்மதியென்
றே, மொய்த்தமாணவர்சூழ்தருபிரமிட்டன்முயன்றுதன்விரு
ப்பிலெய்தினனால். [௬௰]

வாய்ந்தவப்பொழுதேவேந்தனுமேகிவளர்பரங்கிரியடைந்த
னனீர், தோய்ந்தபின்பண்டையதனிலும்விளங்குசோதிபெற்
றுளங்களிகூர்ந்து, பாய்ந்தநீர்ச்சடிலசேகரனுடனேபவள
வரய்க்குமரனைப்போற்றி, யாய்ந்தசீர்பெருகும்விசாலைபுக்கிரு
ந்தேயவனியையோம்பிவாழ்ந்தனனால். [௬௧]

வேறு.

இன்னனையபயன்விளைக்கும்பிரமகூவமெழும்புனிதநீர்குடைட்
ந்தேயாளுஞ்சோதிப், பொன்விழுந்துவிழுந்தனையவேணியா
னைப்புங்கவர்மாமுடித்தழும்புபொலிந்ததாளுங், கொன்னவி
லுநெட்டிலைவேற்கையுங்கொண்டகுமரனைப்போற்றிப்பரம
குவட்டைச்சூழ்ந்து, மன்னியகன்றனமெனக்காலவற்குநீதி
வ்ளர்தேவத்துதிபகுத்துவகுத்துப்போனான். [௬௭]

தண்பொழினீர்பெருகியிம்பிரமகூவத்தகைமையது கேட்டி
டுவோர்தழைந்துநேயம், பண்பெருகக்கூறிடுவோர்சாபமே
றப்பவந்துடைப்பர்மணக்கோலம்பரிப்பரென்று, நண்பெரு
ந்தேவத்துதிகாலவற்குச்சொற்றநற்கதையாமென்றுசவுனகர்
க்குத்தொன்னூ, லெண்பெருகக்கருத்தழும்பேறியசொன்னூ
வாவிளரிலவுதவளவெண்ணீறிலங்குஞ்சூதன். [௬அ]

ரு-வது, பிரமகூவச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம் ரு-க்கு-கூடிய திருவிருத்தம்-உஅஉ



## ஆறாவது.

## தலவிசேடச் சருக்கம்.

வண்டலம்பியகஞ்சமாளிகைவானவன்றிருமன்றல்செய்
தண்டர்கூறியவேதகூவமதாடல்செய்ததறைந்தபின்
விண்டலம்புகழும்பரங்கிரிவீறுமன்பொடுதூயநீ
ரெண்டருந்தகைசவுனகற்கருளெய்துசூதனியம்புவான். (க)

ஊறல்பொங்கியுவட்டெழும்புனிதத்துநீர்திகழொன்பதில்
வீறுதங்குமிரண்டுநீர்மிகமேன்மையாகுமதேதெனின்
மாதிருக்குமுருக்குசண்முகவாவியொன்றதின்மூழ்குவோ
ரிறிலன்புபொருந்தறம்பொருளின்பவீடடைவாரரோ. [உ)

முன்புகன்றுதெரிந்துசத்தியகூவமொன்றதின்மூழ்கவே
வன்பெழுந்தவினைப்பொருப்பைமுருக்குமன்றிமழுக்கையா
ன், றன்பதந்தொழுமன்புமேலரிச்சந்திரன்புவியாளுமோர்
மன்புவிக்கொருவாசகத்தவனென்றெல்லோரும் வகுக்கவே.

மெய்யெனுந்திருவிரதபங்கம்விளைந்திடாவகையித்தலத்
தெய்தியூறலுவட்டெழுங்குளிரோறுசத்தியகூவநீ
ருய்யுமாறுகுடைந்தருந்தவமுற்றும்வாய்மைவழானென
வையமேத்துமிருஞ்சுடர்த்துணைவானுலாவியவைகலும் [ச]

பான்மதிப்பிளவிட்டவேணியர்பாலர்வைகியசோலைசூழ்
கான்மலிந்தபரங்கிரிக்கணோர்கணமாக்கணமாயினு
மேன்மையன்பொடுவைகுவோர்வினைவேரறுத்து நலம்பெறு
மான்மழுக்கையனுருவுகொண்டுவெயங்குவாருரைதிண்ணமே.

மஞ்சுறங்குதலைப்பரங்கிரிவைகிமாதவமெய்திவாழ்
விஞ்சுமாமுனிவோரளப்பிலர்சிலர்பகுத்துவிளம்பிலோ
வஞ்சுகம்பகர்தற்கியாமளவிட்டிலேமரிதம்மவோ [வாம்
செஞ்சொல்வேதமுழங்குவாய்மையர்சிலையாமும்விளம்பு

கதிர்பொருந்தியநீற்றுமேனியர்கபிலரத்திரிகண்ணுவர்
முதிர்செழுந்தவர்சவுனபாற்கரமுனிமரீசிவசிட்டர்மெய்

குதிர்குதித்திடுமெங்கிராமுனிபிருகுகோகிலர்தூமிராச்
சதிர்கொள்சங்கிரதித்தமாமுனியேனையோர்பலர்சாருவார்.[எ

வெண்ணிலாவுதருந்திருப்பொடிமெய்யர்கண்டிகை மன்னுதா
ருண்ணிறைந்தவுரத்தர்நீள்மரவுரியைவிக்குகுறுக்கினர்
தண்ணிறைந்திடுதத்தமக்குளதய்வுமிக்கெழுநட்பினர்
மண்ணுேம்பர்பழிச்சுதிவ்வியம்வைத்தமாவுருவத்தரோ [அ]

பைத்தலைப்பணியின்மருத்தொடுபெயமூலர்க்துதிர்சருகுணும்
பித்தளோங்தகருத்தரின்பிறழுந்திறத்தர்முரண்டருங்
கொத்தெழுந்தனகூனெழுந்தனகோடுகொண்டவிலங்குபோ
ல், வைத்தமெய்யினர்பக்கமேற்சிறை மன்னுபுள்வடிவத்தரே.

விண்டொடுங்குமிப்பரங்கிரிவிமலனைக்கறையுதறுவேல்
கொண்டசேவகனைப்பராவியகொள்கை முப்பொழுதெய்தி
யே,வண்டுகிண்டிடமதுவொழுக்கியமலர் சொரிந்துவதிந்துகை
கண்டவாமலகம்மெனப்பொருள்கண்டுளங்களிகூறுவார்[கo]

இத்தகைத்தவராசர்வைகுமெழிற்பரங்கிரிதன்னிலே
கொத்தெழுந்திடுகற்பகத்தருநீழல்கொண்டவனுதியோர்
மெய்த்திசைப்பதிகாவலோர்வரைகூப்புடெல்லைவிளங்குபே
ரொத்தலிங்கமமைத்தருச்சனையோகையிற்புரிவாரரோ. [கக]

எண்ணிறந்திடுபாவவேரையெடுத்தெடுத்துமுருக்கியே
புண்ணியம்பலசெய்தமாந்தர்பொருந்துபோகமுநல்கியே
கண்ணிறைந்திடுநெற்றியார்கைலைக்கிரிக்கணிருத்தியே
யண்ணலார்வடிவாக்கியேயரனுகவுஞ்செயுமத்தலம். [கஉ]

வண்பரங்கிரியம்பதிக்கண்வடித்தவேதியர்கைக்கொளப்
பண்புடன்பசுவைச்சிறக்கவளித்துளார்பயனைச்சொலி
னெண்பிறந்தமயிற்கொர்கற்பமிருங்குலத்தொடுகைலையி
னண்புடன்களிகூரமேவிநயந்துநாளும்விளம்புவார். [கங]

வேறு.

பொங்கருடுத்தபரங்கிரியிற்பூஞ்சோலைகளைப் பொலிவித்தோர்
கொங்குவிசிறுந்திருமாலைகுமரன்புயத்திலணிவித்தோர்

கந்தல்கிழியத்திருவிளக்குகட்டம்பன்கோயிலியற்றுவித்தோர்
துங்கம்விளைத்தபயன்சிவனேசொல்வரனெம்மாற்சொலவரி
தே. [கச]

திங்கடோறும்வருஞ்சோமவாரந்தனிலேதேயத்தோர்
மங்கைபாகன்குமரனையேவந்துவழுத்திப்பரங்கிரியிற்
பொங்குசிறப்புமிகவிடுத்துவிரதம்பூண்டோர்மறுதலங்க
ளெங்குந்திரிந்துகோடிநோன்பியற்றும்பயனையடைவாரே. []

ஏற்றுந்திரைநீர்ப்பரங்கிரியினெந்தவிரதநோற்றாலு
மற்றைப்பதியிற்பலகோடிவிரதமிழைத்தபயன்மலிந்து
பற்றும்பாவவினையறுத்துப்படருஞ்செல்வம் பொலிந்தோங்கி
சுற்றமுடனேவெள்ளியொளிதுளும்பும்கைலைப்பொருப்பணை
வார் [க்சு]

தெய்வவட்சொல்லுமைகூடச்சிவனுமுறையிற்சோமனெனுந்
துய்யதிருப்பேர்பெறுஞ்சோமதினத்திற்சுரந்தவிருளொதுங்
கு,மையொண்களத்தர்பரங்கிரியில்வளருங்குமரனுகந்திடுநா
ட்,கொய்யுமலர்மாலைகள்சாத்தக்குறைவிலாதபேறடைவார்.[]

கூற்றின்முதுகுபடச்சிவந்துகுலவும்பதத்தசிவன்பூசை
தோற்றும்பயனையளப்பவரார்தூயதந்தைதாளெறிந்தோர்
மாற்றமறியாதருள்பூசைவளரும்பரங்குன்றதில்வகுப்போ
ரேற்றுங்கதிசேருவர்திண்ணமிந்தப்பதிக்கோருவமையுண்
டோ. [கஅ]

மருவும்புனிதகார்த்திகையாமாதமருவுங்கார்த்திகைநாட்
பொருவில்பயன்சேர்சரவணப்பூம்பொய்கை படிந்துசண்முக
னை,பெருகும்பசும்பாலந்தமுதம்பெறுகவியந்தேன்கதலியொ
டு,தருவின்பழச்சாரூட்டுவித்துதண்ணார்புழுகுஞ்சாத்துவித்து,

குமரன்விரும்புந்திருநீலோற்பலமாங்குளிர்தார்சாத்தியே
யமுதுநிகருநிவேதனங்களாறுவதனத்தூட்டுவித்தோர் [லையுங்
குமுறுதிரைவாழ்கங்கையைப்போற்குலவுஞ்செய்யுள்வடக
தமிழுந்தொடுக்கவல்லவராய்த்தரணியாளுமிறையாவார். []

தருவெங்கொடுமையஞ்செனும்பாதகத்தையறுக்குமஞ்செழு
த்தைச்,குருதியொழுகும்வேலுடையகுமரன்றிருமுன்னுயிரத்
தெட்,டுருவின்றெனினூற்றெட்டெனினுமுருவையியற்றித்
தாய்வயிற்றிற்,கருவையகழ்ந்துபாழ்படுத்திக்கடவுள்சாரூபம்
பெறுவார். [உக]

செல்வம்பெருகும்பரங்கிரியாந்தெய்வப்பதியங்குரோசமெனு
மெல்லைதனின்மாண்டவர்கதியினெய்துவார்கள்திவ்வியங்க
ள், வல்லதலத்திலுடலெறியக்கிடைக்கவெளிதோசயம்புவளர்
தொல்லைப்பதியிலிருந்திடவேகிடையாதுலகந்தோன்றினர்க்
கே. [உஉ]

விழைந்துமனிதர்வகுத்தலிங்கமதனின்முனிவர்மேவியுளங்
குழைந்துபதித்தகுறியதிகமதனிற்சித்தர்குலவியிடத்
தழைந்தவிலிங்கமதிகமென்றுந்தருவிண்ணவர்தாபனப்பூசை
யிழைந்தவிலிங்கமதிகமதிற்சயம்புலிங்கமினிதுயரும். [உங]

தெய்வச்சயம்புகொழுந்துவிட்டெச்சிறந்ததலத்திற்புராதனநூ
லையமகலவுரைத்தபதியதிகமதனிலிருந்திடவே
பெய்யும்விருப்பம்பெற்றாலும்பெறுதற்கரியகலியுகத்தி
லுய்யும்வகைக்கோரிடையூற்றையெய்திமனிதருறுதிபெறார்.

பன்னூல்புகழும்பரங்கிரியின்பான்மையறிந்தேயிடையூறு
முன்னூறணுகிற்பின்னூறுமுயன்றபுத்திதனைத்தேர்ந்து [ட்
தொன்னூற்கையம்விளைந்தகலியுகத்திற்றுன்றுமனிதருக்கு
டன்னூரெனவேயுறையுமவன்றனையூர்நரகூர்தனைச்சாரான்.

மதிதோய்சிமயப்பரங்கிரியில்வாழ்வோரயலார்மனைவிழைந்
தும், விதிதோய்தமக்குவிதித்திடுமூணல்லாதூணைவிரும்பியு
ண்டும், கதிர்தோய்முப்பான்பணவிடையாங்கனகங்கரந்து
மிவ்வகையா, முதிர்தெர்கொடுமையெனநடுங்காமுற்றும்புரி
யுந்தீவினையோர். [உசு]

கும்பிதனிலேகிடந்தலறக்குளியாரெனினுமவர்புரிந்த
வெம்புகொடியதீவினையைவீட்டுஞ்செயலேதெனின்வகென்

பம்புகுருதியலையெறிந்துப்பதைத்துத்துடிக்கத்திரிசூலத்
தம்பிநுனியிலேற்றிவினைதணித்தாங்குதறவீடடைவார். [௨எ)

இக்காதையினையெழுதரியாவிருக்கில்வடித்தசாரமெனப்
புக்காரமுதமெனக்கேட்போர்புகலுமவரைநஞ்சுதினங்
கக்காரழற்பாம்பினையணிந்தகடவுளெனப்பாவித்தேத்துந்
தக்கார்கதியிலடைந்திடுவார்சாற்றுந்தகைமைசததியமே [௨அ

௬-வது, தலவிசேடச்சருக்க
முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-௬-க்கு-கூடியதிருவிருத்தம்-௩௱௧௦.



ஏழாவது

## அரிச்சந்திரச்சருக்கம்



மூன்றலேறுதண்பொங்கர்சூழ்தரும்வண்பரங்கிரிமன்னியே
நன்றிவீடுபலிக்குமந்தநீர்மூழ்குநாளையுஞ்சொல்வழா
வென்றிசேரரிச்சந்திரன்பெறுவீறுமந்தணன்வினவவே
கொன்றைவேணியரன்பதந்தொழுஞ்சூதமாமுனிகூறுவான்

வேனில்வேள்களிகொண்டமேடமாதத்தினிற்படர் சித்திரை
தானணைந்திடுபூரணைத்திதிதன்னில்வல்லிருள்சாயவே
வானெழுங்கதிர்மேவுகாலையின்மன்னுதங்கருமம்புரிந்
தானசத்தியகூவனீரினடைந்துசெய்வனகூறுவாம். [௨)

தூயநீரொனுந்தேவனைத்திருவுண்ணினைந்துபின்சூழ்ந்துதன்
னேயமோடெதிர்மேவியெண்வகையைவகைச்செயனிறை
யவே,யாயவந்தனைசெய்துசொல்வழுத்திக்கிளத்திடுமாரணர்
க்,கேயபூசனைசெய்துமுண்பனவினிதளித்தபின்னவர்களால்.

குளிர்பொருந்தவேயாசிபெற்றபின்கோமயந்திலந்தண்டுல
களிர்பொருந்துபச்சறுகுகூடவேகொண்டுநற்றலைநிறுவிசெய்

துளிகள்கூட்வோராறெனும்படிகாளிலேறியேதொல்லையா
யொளிசெயும்பவமியாவையும்வெளிப்படகினைந்தபிறேதியே

இக்கொடும்பவந்தீர்த்தியென்றபினெதிரிறைஞ்சிநீர்மூழ்கு
வோர், தக்கநூறெனும்வயதிலேவிதித்தகைமைசேரொருஞா
ன்றுதான், மிக்கசத்தியகூவமாடிடவேண்டுமோலதுபெற்றிலா
ரொக்கமானிடரிகழவேகடமாடிடும்பிணமொப்பரோ. [ரு]

வரங்கிளைத்திடும்பரங்கிரித்தலமருவிவேதருக்கோர்பிடி
காம்பிடித்திடுமென்னமிட்டவர்களிதுளங்கிவாழ்வெய்தியே
சிரங்கிளைத்திடுங்கிலைகள்கூடுவேர்தினகரன்குளிர்திங்களும்
பொருந்துநாளவர்கால்வழித்திரள்பூமியெய்தியேவாழுமே. (]

திருப்பரங்கிரிவேலர்சங்கரர்தேமலிந்தபாலன்னமேல்
விருப்பெழுந்திடவூட்டுவார்வினைவீடுநற்பயனடைவரா [சோ
லிருக்குறைத்தவர்க்கினியபாலுடனெய்தியேசமைக்கின்ற
றருத்துவார்வினையாவையுந்துடைத்தலகில்பேறடைவாரரோ

திருமலிந்தவைகாசிமாதமேதிங்கள்கேட்டைநாட்புனிதமே
மருவுசத்தியகூவமாடியேமருவுதந்தைமார்மந்திரந்
தருதருப்பணஞ்செய்யவேயவர்தந்தைமார்நரகெய்தினு
நரகைவிட்டவர்வெள்ளியங்கிரிநண்ணியேகளிகூறுவார். (அ)

பின்னர்நற்குலந்தன்னின்மேவியேபெருகுசெல்வராயீற்றிலே
மன்னர்தன்பதநண்ணுவாரருள்மருவுசத்தியகூவநீர்
தன்னின்மூழ்குவர்முயலகத்தொடுகுட்டமீளைநோய்சாடியே
இன்னல்செய்தவேதாளமாதிசேரின்னல்விட்டருளெய்துவார்

வேறு

இக்கதைநிறுத்தியயோத்தியாள்வேந்தனினிதொடுசத்திய
வாய்மை, மிக்கதொல்வரத்தைப்பெற்றிடுங்காதைவிளம்புவா
ந்திரைகுதிததலவு, மைக்கடற்புவியிலெண்டிசைவிளங்கவண
ர்ந்திடுங்குலகிரியெட்டுங், திக்கினிலெல்லைக்கல்லெனநிறுவித்
தெய்வயானைவிரும்பியதோளான். (கா)

குடைகடலுடுத்தவிருநிலவளாகங்குளிர்மலிந்திடக்குடைநிழற்றித், திரள்படமேவுமலகைபேழ்வயிறுதேக்கிடவேப்பமிட்டுலவ, மருவலரீன்றமானிடரிகெக்கண்வகுத்தவெங்கொடியவர்தலைகள், தரைதனிலுருள்கப்பரையெனகிடக்கத்தாளுதைத்திடறுவெங்களிற்ருன். (கக)

இறைவனைப்பரவுங்கருந்தழும்பதனினிலங்கியநீறணிநுதலாணிறைதருமலரோன்மரலளந்தறியாநீட்சியைக்குறுக்கியவுளத்தான், மறுவறுவேந்தர்நெருக்கமுற்றுலவமகுடமுமகுடமுமுரிஞிக், குறைவறுகனகப்பொடிமலையெனவேகுவிந்திடுகடைத்தலையுடையான்.

வுணாந்திடாமாதர்குடமுலைதன்வாய்மடுத்தபான்முலையெனத்தெரிந்தோன், திருந்தியசெங்கோன்மன்னரும்புகழுந்திகழரிச்சந்திரனென்போன், புரந்துபல்லுயிருந்தம்மகப்போலப்புடவியையாண்டநாடனக்கு, சிரந்தொழுங்குருவாம்வசிட்டனைநீதித்திறங்களைவினவியகாலை. [கங]

பற்பலசெய்கையுரைத்தபின்னவையிற்பாரினிலுத்தமச்செயலாஞ், சொற்பிழையுரையாச்சத்தியவிரதந்தூயபேரிதுவழுவரதே, யற்புதம்விளக்குமைம்புலன்வழியையடைத்துளந்தன்வசமாக்கித், தற்பகையாக்கும்பொய்யிலாமெய்யேதனக்குதவுறுதியென்றுணர்தி. (கச)

என்றிதுகூறத்திருமுடிதுளக்கியெழிலரிச்சந்திரன்வாய்மை, யொன்றெனுமுறுதியாவதேவிரதமென்றுளங்கொண்டபினுறக்கந், தன்றகையறியாச்சொற்பனந்தனிலுஞ்சபையெழுந்திசையினுமனிதர், கன்றியேகூறும்வழக்கினுஞ்சிரமங்காட்டியபோர்புரிபொழுதும். (கரு)

பாங்கர்சூழிருந்தவரசர்காளையர்கள்பவளவாய்நகை விளைந்திடவே, தேங்கியவினோதந்தன்னிலுமொருசொற்செப்புவதன்றியேயுரையான், வீங்குநீராழியுலகினின்மெய்யைவிளம்பிடாப்

பொய்யரைக்கரங்கி, னேக்கியேயடுங்கிக்காலனைப்போல
வெண்ணியேவுளந்துணுக்கிடுவான். (கசு)

இன்னணநீதிமன்னவனயோத்தியிருந்திடுநாளினெம்முருக
ன், பொன்னடிச்சீர்த்திமகதவீணையினிற் பொருத்தியநாரத
ன்வரவே, மன்னவனெழுந்தேயருக்கியம்பலித்துவழுத்திநி
ன்றிடப்பரங்கிரியின், மின்னியபுகழுஞ்சத்தியதீர்த்தமேன்
மையும்விரித்துரைசெய்தான். (கஎ)

சத்தியவாய்மைநோன்பினிலுறுதிதழைக்தசங்கற்பமிட் டிருந்
தோன்,மெய்த்திருவுதவுஞ்சத்தியகிரியின்வீறுளம்பிடிபடவிரு
ம்பி, முத்திதந்தருளுந்தீர்த்தயாத்திரையின்முயற்சியாலமைச்
சரையழைத்துக், கத்துதெண்டிரைநீர்நிலவளாகத்தின்கரும
ங்களியற்றுமென்றறைந்தான். [கஅ]

வேறு

கணிதம்பயின்றவேதியர்கள்காலங்குறிக்கப்பொற்காசு
மணியின்குவையுந்தானைகளின்வகையுமிருணைக்கிழித்தொதுக்
பணியின்றிரளுமானையினும்பரியின்மேலுங்கூடனெழுந்து[கும்
திணியுமுதுகொட்டகமீதுஞ்செல்லச்சிலர்மாணிடர்போத. ()

முதிர்ந்தகனகத்தேர்கடவிமொய்க்குமினத்தார்சிவிகைவர்ப்
பொதும்பொழுஞ்சத்தியசைலம்பொருவிலயோத்திநடுவாக
வதிந்ததலங்கள்புண்ணியநீர்மருவிக்குடைந்தந்தணர்வறு
மை, வெதும்பும்படிபொன்மழைபொழிந்துவிமலர்ப்பழிச்சி
யினிதகன்றான். [உ0]

அரியகடவுளனைவருக்குமறியாச்சயம்புவாகிவிடம்
பருகியவியாவிருத்தனெனும்பரமனிருந்தவிருத்தகிரி
மருவியிருபாலெழுந்தகளைவளைத்துக்களைத்துவருஞ்சங்கந்
திரைகளெடுத்தம்மனையாடுந்திருமாமணிமுத்தாறடைந்தான்.

புனிதத்திருநீராடிமன்னன்பூதியணியுநியமமுற்றிக்
கனிதுய்த்திடுந்தீம்பசுங்குதலைக்கௌரிதலைவன்றிருக்கோயி
லினிதிற்போதச்சன்னிதியிலெழுந்துவன்னிமரத்தின்கீழ்
முனிவர்க்குபதேசங்கள்பலமொழியுந்தவரோமசமுனிவன்.

செய்யபதத்தையெடுத்தெடுத்துச்சிரத்திற்சூடிக்கண்ணிலொற்றி, யையமறவேபழிச்சிநிற்குமவனைநோக்கியருட்பார்வையெய்தியுளைப்பனிலமேழுமெடுக்கும்பொருளையெடுப்பதுண்டே, மெய்யேமெய்யாதாரமெனும்வேதப்பொருண் மற்றோரறியான். [உ௩]

மெய்யையகன்றுதனக்குறுதிவிரும்புந்துணைவர்வேறில்லை
மெய்யைக்கெடுத்துநாடோறும்விளைக்குந்தருமம்பயனில்லை
மெய்யைத்தவிர்ந்துபுவிசூழ்ந்துமெலிந்துதேடுநிதியமில்லை
மெய்யையகற்றியுடல்வருந்திவிதிக்குந்தவங்கள்வேறில்லை. []

பகர்சத்தியத்தைவிட்டுண்மைப்படுத்துங்கேள்வியாதுநலந்
தொகுசத்தியத்தைவிட்டுழன்றுதோயும்புனிதநீர்யாது
தருசத்தியத்தைவிட்டுநின்றுதழலைவளர்க்குமகமியாது [ஞ.
திகழ்சததியததைவிட்டவர்க்குத்தெரிசற்குணங்கள்யாதுமன்

மேலாய்விளங்குந்தருமத்துள்வேள்விமெய்யுட்கேட்டியொன்று, மேலாதாயின்வரும்பலருக்குபகாரத்தைத்தராசிலிட்டுக், கோலாநிறுக்கச்சமனாகுங்குற்றமில்லாச்செயலிரண்டும் வேலாவலையத்தேபுரிதிவேந்தர்மகுடம்பொருந்தாளாய்[உ௬]

குலவுங்கடவுட்பழம்பாடற்கூப்பிட்டரற்றுஞ்செயலிரண்டு மூலகிற்கொண்டாய்நினக்குவமையுளைக்கப்பாற்றோவிதுவன்றி, யிலகுஞ்செயலொன்றுத்தமமாமிமையோர்முதலாமாலயனு, மலரிட்டிறைஞ்சுஞ்சிவபூசைவழுவாதியற்றிவழுத்துதியால். [உ௭]

கன்னிரொழுந்ததிருமலையிற்காணவுயருஞ்சிமயவரை
தன்னீர்குகையிற்றிவ்வியமாந்தலத்திலுலகிற்புராதனமா
நன்னீராற்றங்கரையினறுவனத்தின்முனிவர்நண்ணிடத்தின், முன்னீருடுத்தநிலம்பிளந்துமுளைக்குமிலிங்கநாறுந்தொடையாய். [உஅ]

புனிதக்கடவுள்சயம்புலிங்கம்பூசைப்பயனைமிகவுதவு [ஞ
மினிற்செறியுஞ்சயம்புடனேயிலங்குஞ்செவ்வேளுவந்தருதி

தனிபெற்றகிலம்புகழுமொருதலங்கூறுதுங்கேண்மதியினி
மை,கனியப்பழுத்துமதுப்பிலிற்றிக்காட்டுஞ் சுவைசேர்தமிழ்
க்கூடல். [௨௯]

நிருதித்திசைகாலேசனையினிகழ்சத்தியஞானச்சைல
மருவுவாயுவொருகாலம்வளருங்கந்தமாதனத்துத்
தருமச்சிமையம்பறித்தெறியத்தரையில்விழுந்திக்குமரன்மகி
ழ்,புரியுமுதன்மைப்பரங்கிரியின் புகழையாமேபுகழ்வோமே.

குவட்டின்குடுமியிடத்தூறிகுலவும்வடபாலூற்றெழுந்தே
யுவட்டவருசத்தியகூவமுற்றுக்குடைந்தீசனைநோக்கத்
தெவிட்டத்தாராவழகுடையசெவ்வேள்பதத்தைப்பவச்சலதி
துவட்டப்பணிவோர்முனிவருக்குத்தோன்றவரிதாங்கதிய
டைவார். [௩௧]

குளிரும்புயல்சூழ்பரங்கிரியைக்குறித்துவிரைவிற்போந்தறிவு
தெளியும்படிநாரதனிசைக்குஞ்செயன்மாறுதுசத்தியநீ
ரொளிருந்தீர்த்தமாடியுனையொன்றுந்தவஞ்செய்குவைநாளு
நளிர்சேர்மாசிமகத்தாடவருதுமென்றுணரபதியும். [௩௨]

இமிழுந்திரைக்கங்காதரனையென்றும்பெரியபிராட்டியுடன்
ஞிமிறுந்துதையமுறுக்கவிழ்ந்துநிறைதேன்குதிக்குமலர்தூவி
யமுதம்பொலியுந்தனதுபெயரணியாபரணத்தெழுதிநீர் [ன்.
குமுறப்பணிமுச்செறிந்தசடைக்குழகனணியச்சாத்துவித்தா

அடிக்கைப்புலியும்பதஞ்சலியஞ்சலிக்கவொலித்துப் பதஞ்ச
லிக்க, நடிக்குஞ்சிவனைத்தனுமாதநாளாதிரையிற்போற்றியே
யிடிக்கொத்திரைக்குங்கரியுரிவையிறுக்கும்போர்வைச்சிவத
லங்கள், படிக்கட்பலவுந்தொழுதரசன்படர்ந்துபரங்குன்ற
ணுகினனால். (௩௪]

கமஞ்சூலுளோங்குவயிறுடையக்கார்மேகங்கள்விழிதுயிலச்
சமந்தகுடுமிக்கூன்கிடக்குங்கரும்புநெரிந்துசொரிதரளஞ்
சமஞ்சேர்காமன்விடுமுல்லைதைக்கவெருவியொதுங்குமின்
னார், அமைந்தமுலையிற்புரண்டிடவேயழ வின்பொறியென்ற
கற்றிவோர். [௩௫]

முகைவிண்டலர்ந்தமுண்டகத்திமூளைத்தபொருட்டுப்பசுங்
னகந், தொகைகொண்டதன்சூழ்கிடந்தவண்டுசூழுங்கரியாம
தன்மீது, •புகுதுஞ்சோலைநெட்டையின்வால்பொருக்கிற்பிடி
த்தூக்கியவாய், தருமற்கடங்கம்மியரூதுங்குழல்போற்கனா
சூழ்தடம்பலவே. (௩௬)

வேறு.

இத்தகைபொலிந்துசீதமெடுதெதெடுத்தருவிதூற்ற
மூத்தருள்பரங்குன்றெய்திமொய்த்தபொன்னிரதமோர்சார்
வைத்தவணிழிந்துகேளிர்மாணிடருடுத்துலாவச்
சத்தியதீர்த்தம்போற்றித்தகுவிருப்புடனேதோய்ந்தான் (௩௭

பசுங்கனகந்தங்கந்தம்பாய்தருமாரமாரம்
பொசிந்தொளியுருதலையாற்பூசுரர்தமக்குநல்கிக்
கசிந்திடுநீலகண்டன்கந்தவேள்கோயிற்போத
வசைந்தசைந்துகண்டவேணியருட்கவுதமனைக்கண்டான். )

செங்கையங்கஞ்சங்கஞ்சக்கடவுளின்செம்பிட்டேந்து
மங்கைபாகனைப்போலுற்றமாதவன்பாதம்போற்றி
யங்குமாணவனைநோக்கியஞ்சலித்தவனாநோக்கி
மங்கலமுடனேவாழியென்றமாதவன்பின்சொல்வான். (௩௯)

இன்னிசைமகதியாழ்க்கையிருந்தவன்பிருந்தவன்சொன்
முன்னிமுன்செய்தநோன்புமூட்டியபயனால்வந்தாய்
மன்னுசத்தியநீர்தோய்ந்துவரந்தருமிறையைப்போற்றிப்
பொன்னெழுங்கோயில்செய்துவிழாவையும்புரிதியென்றான்

அந்தவாய்மொழிகொண்டிரெட்டார்யதோர்வரிசையேற்றி
யெந்தையாஞ்சிவனைச்செவ்வேளடியிருபோதைமுப்போ
தூந்தனதுளத்துநீங்காதுவகையிற்பூசைசெய்தே
கொந்தவிழ்மயனைக்கூவிக்கோயிலைக்கிளத்தியென்றான் (௪௧)

ஏழாவது அரிச்சந்திரச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-எ-க்கு-கூடியதிருவிருத்தம் - ௩௱௧.



## எட்டாவது
## திருவிழாச் சருக்கம்.

தரணியாண்டருளரிச்சந்திரன்பணி
சிரமிசைச்சேரவேதேவர்கம்மியன்
பரமன்வேலவனுடனுதிபண்ணவர்
குருவுமிழ்சினகரங்குயிற்றுவானரோ. (க)

வண்டுளர்முகையவிழ்மாலைத்தேவியை
தண்டுணரிதழியான்சார்ந்துமாமணங்
கொண்டநாளியற்றியகோலமென்னவே
விண்டொடுமண்டபம்பலவியற்றினுன். (உ)

தரைவிசும்பளவிட்சமைத்தல்போனடுப்
பெருகுபொற்சூளிகைபெரியசெங்கதிர்
மருவுநாற்கோணமாய்வகுத்துப்பார்த்தென
விருபரிவேட்டத்தின்மதிளியற்றினுன். (௩)

தோட்விழ்கடம்பனைத்துதிக்கவந்திடும்
பீடுசேர்கதிர்ப்பரிபிணித்துவைத்திட
காடியேபழுவமார்தறியைநட்டென
நீடியகொடிக்கம்பநிறுவினனரோ. (௪)

பிங்கலன்புடைப்பதன்மகவன்பேரொளி
பொங்கியவிமானங்கள்பொலியவைத்தென
விங்கெழுங்குமரவேளிமையவர்க்கெலாஞ்
செங்கதிர்ச்சிகரிகள்செலுத்தினனரோ. (௫)

பரன்றிகழ்குமரனைப்பணிந்துளோர்சிவ
புரம்பெறவழிச்சமைத்தெனப்பொற்கோபுர
முரங்கொள்விண்முகட்டினைவுடைத்துமப்புற
நிரம்பிடவேணியைநிகர்த்துநின்றவே. (௬)

வாலொளிதுளும்பியவெள்ளிமால்வரை
மேலெழுதந்தையைநோக்கிவேலவன்

சாலவாழ்தென்கிரிச்சமைத்தகோயிலைக்
கோலவெங்கதிர்பழுத்திடக்குயிற்றினன். (எ)

எயிற்றுவெண்குடுமிதேய்ந்தேனநாணுறக்
குயிற்றுதாட்டாமரைப்பரமன்கோயிலைக்
கயிற்செறிவேலுடைமகனைக்காண்குற
வெயிற்செறிகீட்டிசையிலங்கச்செய்தனன். (அ)

பணிவரையின்றிடுங்குதலைப்பைங்கிளி
யினிதொடுதிகிரிசங்கேந்துவோன்குகன்
றனையெழில்கண்டிடச்சார்ந்ததேவர்க
ளினிதுறச்சினகரமியற்றினனரோ. (கூ)

வேறு.

இவ்வகையியற்றஞாலத்திறையவன்களிப்புமேவிக்
கொவ்வைவாயுமையாள்பாகன்குமரவேள்விழாவின்வீதி
செவ்வியிற்புரிதியென்னத்தேர்பலமேருச்சோதி
வவ்விடப்பந்தர்சூழமயன்றிருவீதிசெய்தான். (க0)

கானெழுமாலைநாற்றிக்கதிர்பொலியாடிகூட்டி
வானொளிபெறுகவோங்குமண்டபவிதானஞ்செய்து
தேனெழுமாலைவீக்குமாவணஞ்சிறந்தவீதி
தானழகாகச்செய்துதிருவிழாத்தயங்கச்செய்தான். (கக)

தொல்லையங்கடவுள்பாடற்சுருதியாகமநூல்கூறு
மெல்லவிர்குடுமிச்செந்தீயியற்றியவேள்வியாவும்
புல்லுவோராதிசைவர்புகன்றசிந்தியமென்றுண்மைச்
சொல்லுமாகமத்துநீதிதொகுத்திடும்விதிவிதாக. (கஉ)

ஈற்றுநாளடுத்தநாளினெழிற்கொடியேற்றிச்சோதி
தோற்றும்பாலிகைவித்தேற்றிமூனைதாரத்தூற்றிவேதம்
போற்றியகடவுள்வாழ்த்தும்பூசையையியற்றிப்பின்னை
ராற்றல்சேர்விதியதாகவணிவிழாநடத்துங்காலை. (கங)

சல்லரிதிமிலைபேரிதக்கைமத்தளஞ்சேகண்டி
சொல்லெழுதடாரிமிக்கதுந்துபிதவண்டையோடு

புல்லுமல்லாரியோசைக்கிடுபிடிதவில்கள்போர்மா
வல்லிசைடமாரம்வாசிமுக்கிவைமணிவீராணம். (கச)

இன்னபல்லியங்களாழியெனக்கிடந்தொலிக்கச்சோதி
மன்னுசெங்குடுமிசசெவ்வேல்வளர்கொடிவலனிற்போத
மின்னனையார்கள்கோடிவிதம்பெறநடித்துச்சூழப்
பொன்னணிமார்பன்வேதன்புங்கவர்போற்றினூரால். (கரு)

மூவிருநாள்விழாவின்முருகவேளுடனேயீசன்
வாவியவிடையிலேறிவந்திடவீதியெல்லா
மோவியங்குயிற்றமுன்றிலொளிவிளக்குடனேகும்ப
மேவமாமுனிவர்விண்ணோர்மேதினியோர்கள்சூழ்ந்தார் (கசு

வேறு.

எரிபொங்கியவெயிலைச்சுமிளமூரலையுடையோய்
வரிதங்கியசுடர்முத்தலைவடிவேல்வலனணிவோய்
கரியின்றிருவுரிபோர்த்தொளிகமழுந்தழலுருவோ
யரிதங்கியகணையாயெனவறைவாரொருகோடி. (கஎ)

குளிருங்கடல்சுவறும்படிகூர்வேல்விடுமுரவோய்
பிளிறும்படிவருசூருயிர்பிதிருஞ்சமர்புரிவோய்
வெளிருந்தமிடெரிவோரொருவிளமபுந்துதிபுனைவோய்
நளிர்பொங்கியவிழியாயெனநவில்வாரொருகோடி. (கஅ)

தொழுவார்சிவயோகத்தவர்சுடர்வேலனையெதிர்ந்தே
மழுவார்கரன்மதலாயருள்வழங்காயெனப்பதமேல்
விழுவார்பரவசமாயுடல்விதிர்த்தேமொழிகுளறி
யழுவார்குருபரவென்றிசையருள்வார்மனந்தெருள்வார் (ககூ)

பணிவார்விசும்புறைவோர்மனம்படியக்குகனிருதா
ளணிவார்புலனைந்தின்வழியடைவார்மிடைந்தணுகத்
துணிவாரருள்வினைவானதுசொற்றுக்களிதுளங்கித்
தணிவார்மனைமேலாசையைத்தடிப்பார்வினைகடிப்பார். (உ0)

சூழ்வார்தவராசத்தவர்தூரத்திடுதெருப்போற்
றூழ்வார்குருபரனொழில்தங்கண்விருந்தருந்தி

வாழ்வார்சிவஞானமுதமாந்திக்களிகட்லி
லாழ்வார்தமதரந்தைக்கடலகல்வார்துதிபுகல்வார். (உக)

பைவாளரவணிந்தானருள்பாலாவருளென்றே
நைவார்வருதொண்டத்தொகைஞானம்பகம்விழிக்கச்
செய்வார்தமதுயிருக்கிடர்சேர்கூற்றினைவிதியை
வைவாரினியுய்ந்தோமெனவகுப்பார்வினைசெகுப்பார்.(உஉ)

இவ்வாறுவருந்துந்தவரெதிரேமிடைந்துலவி
நவ்வாதியசவ்வாதிகலஞ்சேரெழுத்தோதி
யெவ்வாறருள்பெற்றோரெனவியம்பேமயன்முடிவை
யவ்வாதிதருங்காங்கையன்மகிழுந்திருநாளே. (உ௩)

பூசத்தெழுமுன்னாளெழும்பொற்றேர்கட்விப்பின்
பேசப்படுநாளிற்குளிர்பெருஞ்சரவணநீர்
நேசத்தெழநின்றாட்டியுநிலமேற்கடலெனச்சூழ்ந்
தோசைக்கடல்பெருகத்திருநாட்கண்டதிவ்வுலகே. (உ௪)

வேறு.

பிட்டமதியமுழுதசடைப்பெருமான்குமரன்விழாவியற்றி
வட்டவுலகமினிதளிக்கும்வள்ளலரிச்சந்திரக்குரிசில்
சிட்டர்புகழும்பரங்கிரியிற்செய்யுந்தவத்தாற்குமரன்விழி
கொட்டுங்கருணைபெற்றுமெய்யிற்குலவியுவகைக்கடல்குளித்
தான். [உ௫]

சேதுமுதலாம்பதியடைந்துதீர்த்தங்குடைந்துநீதிமன்னன்
கோதிலொருவாசகம்பெற்றுக்குலவிவனஞ்சேரயோத்திநகர்
போதவமைச்சரெதிர்கொண்டுபொற்பீடத்திலிருத்தவுறைந்
தோதவுவரியுலகளித்தேயூழிவாழ்ந்துகதியடைந்தான், (உ௬).

இந்தத்தகைமைபொலிந்தபரங்கிரியின்சீர்த்தியியம்புவரார்
கந்தித்துலவுஞ்சத்தியகூவத்திற்கடவுண்மாமகத்திற்
பந்தப்பிறவியறமூழ்கப்பாரின்மாசிமகங்கோடி
யுந்தும்புனிதநீராடும்பயனையொருநாளுதவிடுமே. (உ௭)

வரையிற்சிமையத்தென்பாலின்மருவுங்கங்காகுண்டமெனுந்
திருநீர்தன்னிற்கார்த்திகையிற்சேர்கார்த்திகையம்மனுக்கூறி

யொருபத்தெழுநாழிகைதன்னிலுவந்துமூழ்கிச்சிறப்பியற்றி
ப்,பரமர்பாதம்போற்றுவோர்கோடிகிளைகள் கதிபடைக்கும்()

மருவுந்திருக்கார்த்திகைமாதம்வருகார்த்திகைநாள்வளர்கலை
யைப், பொருநீர்த்தரங்கச்சரவணப்பூம்பொய்கைமருவிநால்
வேதம், பெருகுந்திருக்கார்த்திகைமனுவைப்பேசிமூழ்கிச்சிற
ப்புமிட்டு, முருகன்பாதமேத்துவோர் முறைசேர்கைலைப்பொ
ருப்படைவார். (உ௯)

திங்கடோறுங்கார்த்திகையாந்தெய்வத்தினத்திற்குலவுதிரை
பொங்கிக்குதிக்குஞ்சரவணப்பூம்பொய்கைபடிந்துதெய்வமி
ன்னூர், தங்கட்கழுத்துத்திருத்தாலிதந்தகுமரன்சிறப்பிடுவோ
ர்,நங்கட்கமலையருள்பெற்றுநாலுகவிக்குப் புலமைசெய்வார்.

மாசிமருவுங்கெடமெதியின்மதியத்தினின்முன் சொன்னமனுப்
பேசித்திருப்பாற்குண்டநீர்குடைந்தோர்பிறரை யணைந்தது
ங், காசுற்றெழுமூனுண்டதுவுங்கழல்வார்பாலிற்பிரியொனு,
மீசற்கான்பாலாட்டுவித்தோரொளிதிற்கைலையேறிடுவார் (௩௧)

ஈசற்காறுமுகற்காட்டியெழும்பாற்குண்டமெனச்சேரு
நேசத்தந்நீர்திருக்கங்கைநீரிற்கோடிபயனுதவும்
பேசப்படுமந்தாகினியும்பெருமான்குளித்தநீரன்றே
மாசற்றிடவேவீடுதவுமிதுவேயல்லான்மற்றுளவோ. (௩௨)

வேறு.

தெளிதமிழ்ப்பரங்குன்றுருஞ்சிவன்றனைப்பால்கொண்டாட்
டி, யளிபெறுமன்பினுலேயருச்சனையிழைக்கவீசன்
களிதுளங்கியபின்செவ்வேள்களித்திடப்பக்கம்வைத்துக்
குளிர்பெறச்சுவாமிநாதனெனும்பெயர்கொடுத்தான்மன்றே

கலியுகந்தன்னிற்செவ்வேள்கருதியதிருநாளென்றும்
பொலிதரநட்கஞாலம்புகழ்பரங்கிரியேசெவ்வே
டலமெனவோங்கவீசன்சண்முகற்கன்பிலாதார்
மலிதருசிவனுக்கன்புமாற்றினொனவிசைத்தான். (௩௪)

எனுமுறைவரங்கள்பெற்றேயெழிற்பரங்கிரியிற்செவ்வேள்
மனமகிழ்முதன்மையாகமருவிநாயகமாய்த்தானே

புனிதமாயுறைந்தான் சுவாமிபுரமெனக்கதிர்வெண்டிங்க
ளினிதொடுவழங்குநாளுமேழுலகங்கள்போற்றும். (௫௫)

வாலொளிதுளும்புங்கிரகுண்டத்தைமருவிமூழ்கி
யேலுமோர்கனகத்துலையெழின்மறையாளர்க்கீந்தோர்
சாலவுங்கனகமேருச்சைலதானத்தைமானுங்
கோலுநற்றனமெல்லாமப்பயன்கொடுக்குமாதோ. (௫௬)

தென்பரங்கிரியின்மேவித்திருமறையோர்க்குத்தானம்
பொன்பெறுகோதானங்கள்புகழ்பெறுகன்னிதான
மன்புடன்கலைகளாரங்கம்பளமருள்வோர்ஞாலத்
தின்புறுவேந்தராகியீற்றினில்வீடுசேர்வார். (௫௭)

தென்றல்வந்துலவுவீதித்தென்பரங்கிரிவேலற்கே
யொன்றுபொன்வெள்ளிசெம்பாலொளிபெறுதீபதூப
நன்றியினமுதுகூட்டநவையில்பாத்திரத்தையீந்தோர்
வென்றிமுக்குடுமிவேலோன்விழைந்துறைகைலைசேர்வார்.()

சொங்கவிழ்மாலைத்தேவர்கோலொடுதிசைகாப்பாளர்
தங்கியசித்தர்சீலந்தழைந்திடுதவத்தின்மிக்கார்
திங்கள்சேர்கதிரோன்வாய்மைதிகழரிச்சந்திரனென்போன்
பொங்கெழிற்பரங்குன்றீசன்பூசைசெய்தருள்வீடுற்றான்.(௫௯

பொத்தியேழுலகங்கொள்ளப்பொங்கியகடைவெள்ளத்தி
னித்தலைபொலிந்ததெய்வப்பரங்கிரியழியாதிந்த
மெய்த்தலத்தெல்லையைந்துகுரோசமாய்விளங்குமென்றால்
முத்திசேர்பதியின்சீர்த்தியெவர்களான்மொழியலாமே. (௬௦)

திருப்பரங்கிரியில்வீய்ந்தோர்திருச்செவியுபதேசத்தை
விருப்பொடுகௌரிபங்கன்மேவியஞ்செழுத்துக்கூறக்
கருப்பழித்தன்னைதன்சூல்வயிறுபாழ்படவேமேலா
மருட்பொலிந்தமருஞ்சோதியணிகெழுகைலைசேர்வார். (௬௧)

எட்டாவது-திருவிழாச்சருக்கம்
முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-அ-க்கு-கூடியதிருவிருத்தம்- ௬௬௨.



## ஒன்பதாவது

# நற்கீரச்சருக்கம்.



பற்பலதமிழ்களில்வழங்கும்பான்மையும்
பொற்பரங்கிரிக்குகன்புரிந்தலீலையு
நற்புவிவழங்கியநலமுங்கொண்டியா
மற்புதமெழுங்கதைவரைகுவாமரோ. (௧)

வேறு.

ஊற்றிருந்ததேனருவியொழுகியபூந்துணர்ச்சோலை யுடுத்தகூடல், வீற்றிருந்தோனுற்பதுடனொன்பதெனும் புலவருக்குள் விமலன்சேர, வாற்றல்பெறுநற்கீரன்றமிட்சடலையளந்துகொண்டவறிவின்மிக்கான், கீற்றெழுந்தமதிச்சடையானுடன்வாதுகூறியருங்கீர்த்திகொண்டான். [௨]

பின்னமலனுபதேசஞ்செவிபுகட்டியறிவுமிகப்பெருகிச்சீர்த்தி, பன்னியிறைக்கன்புபுரிசீலமுளான்பரங்கிரியிற்படர்ந்துநித்தந், தன்னிகரிலெழுந்ததொருசரவணப்பூந்தடங்குடைந்துதனதுநீதி, மன்னியமக்கடன்கழித்தேயஞ்செழுத்தையேற்றியபின்மதுரைசேர்வான். [௩]

புங்கவர்களிருள்கிழித்தமணிபதிந்தகோபுரங்கள்பொலிந்தகூட, லங்கயற்கண்பாகனன்றிமானிடரில்மாறனன்றியகிலந்தன்னுட், டுங்கமெழுந்தமிழ்மாலைதொடுப்பதில்லையென்றுகொண்டான்றாயரேனும், வெங்கொடுமைவருங்காலமறிகுவரோகுமரனருண்மேவிலார்கள். [௪]

இத்தகையகீரனிசைத்தமிழ்மாலைசெய்திலனென்றிதயத்தெண்ணிக், கொத்திருந்தகடம்பணிந்தோன்பக்கமுறைநாரதனைக்குறித்துநோக்க, வத்தகைமையறிந்தவனுநற்கீரன்வருசமையமறையச்செவ்வேண், மொய்த்தவிறலுக்கிரனண்டாபரணன்றனையழைத்துமொழிவதானன். [௫]

கம்படையாமெழுங்குருதிகொப்பளிக்குமவடிவேலைநாமேயூன்றி, யம்புவியிலமைத்தசரவணப்பொய்கைகலியுகத்திலவ

ணிகாணச், செம்பதுமமாயிரந்தோடுடுத்திலகும்புனிதநீர்சேர் வான்கீரன், வெம்புமொருகுறையேற்றிமாமலையிற்சிறைபுகு த்திமேவுகென்றான். [௬]

அப்பணிதஞ்சிரத்தேந்தியப்பணிவோனருள்குமரனருளையெ ண்ணாச், செப்பரியநற்கீரன்சரவணப்பூந்தடங்குடைந்துதிரு நீறிட்டுக், கப்பெழுந்ததிருவரசினீழலிலேமருவுபஞ்சாக்கர வெண்பாறை, யொப்பரியதலனிருந்தேயஞ்செழுத்தையுரு வியற்றியுறைந்தகாலை. [எ]

திருவரசினிலைச்சருகுதெண்ணீரில்விழும்பொழுது சேலதாகு ம், பொருகரையில்விழும்பொழுதுபறவையாமென்றுவரும்பூ தர்தேர்ந்து மரமுடியிற்சருகதனைக்கிள்ளியிடவங்குமிங்கும ருவிவீழப்,பரியகயலொருபுறமும்பறவையுருவொருபுறமும்ப தைப்பக்கண்டான். [அ]

அன்றுசிறிதஃறிணைகள்பட்டபெரும்பாடுகண்டேயகத்துண் மூன்னிக்; கன்றிமிகநைந்திரங்கிக்கையுகிராற்கிள்ளியிடக் கயலும்புள்ளுங், குன்றியுடல்புரண்டுபுரண்டங்காந்துவாய் பிளந்துகுருதிகக்கிப்,பொன்றிடுங்காற்கண்மூடித்துடித்தயர்ந் துருப்புறவேபுலர்ந்ததம்மா. (௯)

அக்கணத்திலுக்கிரனண்டாபரணன்பற்கடித்தேயழன்றுசீறி [க் கக்குருவருவிதவழ்கடம்பனுறைபரங்கிரியிற்கடியபாவ மிக்கொலையாம்பாதகஞ்செய்தனையென்றுவென்னறைந்து வெருவப்பற்றிப், புக்கபெருமலையின்மேற்குகையடைத்துப் பாறைகொண்டுபுதைத்தார்மன்னோ. (௧0)

அந்தகாளரியதமிட்டெரிபுலவனெட்டுயிர்த்தேயயர்ந்துவிம்மி ச்,சிந்தைமிகநைந்துநைந்துமுகஞ்சுளித்துக்கண்பனித்துத் தேம்பித்தேம்பி,வந்துசிலநாள்கழியமனத்துறுதிபடநினைத்தா ன்மயிலிலேறுங், கந்தனுக்குத்தமிழ்குட்டாக்காரணமீதென் றுமனக்கருத்துட்கொண்டான். (௧௧)

சுவையூறுந்தமிழ்மாலையுலகமெனவெடுத்தோதித்தொன்னூ
லிற்றி, னுவலியதுகிழவோனேயெனக்கூறநெடுங்காலநோன்
புகோடி, புவியிலிளைத்தறிவரியகுமரவேள்வன்கனவுபொருந்
தத்தோற்றி, யவனிதனிற்கிழவனெனவரச்சிறிதுநாளாமென்
றறைந்துபோனான். (௧௨)

அப்பொழுதுநக்கீரன்றமிழ்மாலையிளையோனென் றறைந்துகு
ட்டச், செப்பரியகுடமுனிவர்க்குபதேசஞ்செலுத்துமொரு
செஞ்சொலாளி, யிப்பொருப்பிலடையாளங்கலியுகத்தோர்க
ண்டிடவேலெறியப்பாறை, யொப்பறநேரேகிழிதங்கிருபிள
வாய்ப்பிளந்திடவேயுவப்பின்வந்தான். [௧௩]

அந்தரதுந்துபியொலிக்கமன்றலம்பூமழைபொழியவயனே
னோர்கள், வந்துவந்துகரங்கூப்பியிருபாலும்வளைந்துடுப்பமகி
ழ்ந்துதெய்வத், தந்தியொருபாலிருப்ப வுக்கிரனண்டாபரண
ன்சார்ந்துலாவக், கொந்தவிழ்தார்பெறுவீரர்குழந்துவரமயி
லில்வருங்கோலங்கண்டான். [௧௪]

குதலைமொழியினித்தினித்துப்புறப்படுத்தக்குறுமூரல்கொ
ண்டவாயு, மதியமெனவமுதொழுகுமலர்முகமுமருளொழுகி
வழிந்தகண்ணுஞ், சததளமொத்திமையவர்கண்முடியுழுதத
ழும்பிருந்ததண்டைக்காலும், பதியவருவடிவழகையிருவிழி
க்குவிருந்தளித்துப்பணிந்துநின்றான். [௧௫]

அக்கணத்துநக்கீரனதிசயித்துத்தலைதுளக்கியருளானந்தங்
கக்கியகண்பனிக்கவுடல்மயிர்க்கூச்சுப்புளகமொடுகம்பஞ்சே
ர, மிக்ககதிர்கோடியர்களொளிவிரித்துமதிக்குளிர்மெய்விள
ங்குஞ்செவ்வேள், தக்கவிருபதம்பணிந்துமும்மைவலஞ்சூழ்ந்
துபுகழ்சாற்றுவானால். [௧௬)

வேறு.

பணிவரையின்மகளுதவவுண்டருளுஞ்செங்கனிவாய்ப்பாலா
போற்றி, துணிசிலைவேண்மிகநாணவடிவழகுகொண்டருளுங்
குமராபோற்றி, வினையமெழுஞ்சூர்கிளையைவேரறுக்கவுளததி

ல்வைத்தவிருத்தாபோற்றி, முனிவருளங்கனியமிகவரங்குல வுபரங்கிரியின்முருகாபோற்றி. [கஎ]

கருதரியவாறுமுகங்கொண்டருளநிறைந்தவருட்கடலேபோ ற்றி, திரைமருவுநிலவங்கஞ்சேரவுயிர்ச்சரக்கையிடுஞ் செட்டி போற்றி, விரிதருவான்குஞ்சரத்தைக்கண்ணியிட்டுப்பிடித்த வெழில்வேடாபோற்றி, குருந்தியெழும்வேலேந்திவரங்குலவு பரங்கிரியிற்குமராபோற்றி. [கஅ]

வேறு.

நஞ்சுபோலெழுநமன்வருமந்நாளுன்றன்
கஞ்சமாம்பதமிரண்டுமொன்றியகருத்தேனு
லஞ்சுமாறுசெய்யாவகையேழையையளிப்பாய்
மஞ்சுமெட்டிடவளர்பரங்கிரிக்குகபோற்றி. [கசு]

வேறு.

அப்பொழுதுகூறுமிரும்பனுவலுக்குமகிழ்ந்தனமென் றருளிச் செவ்வேள், செப்புவரங்கேண்மதியென் றுரைத்திடவேயஞ் சலித்துத்திருந்துஞால, மொப்பிலிவேயோனெனவேயுனையு ரைக்கவேண்டுமியானுரைத்தமாலே, தப்பறவேதுதித்திடுவோ ர்விருப்புதவவேண்டுமெனத்தாழ்ந்துநின்றான். (உ௦)

அவ்வரந்தந்தருளியபின்வெண்டிவலேகொழித்ததிரையதிருங் கங்கை யுய்வகையான்பெய்மூழ்கவிடைதருதியெனக்குமர னுவப்பினேக்கி, யிவ்வசலக்கொடுமுடித்தென்பாற்கங்கை யழைப்பமெனயியம்பிநோக்கிற், செவ்வியலற்புதம்விளைக்கப் பஞ்சவன்னத்தேளியுலாத்திரியுமென்றான். [உச]

அக்காலையெனையாண்டவண்ணன்மறைந்திடலுமவனருளை முன்னி, மிக்காயவரைக்குமியிடத்தொருசார்கங்கைவரவி ளைந்ததெண்ணீ,ரெக்காலுங்கலியுகத்துமற்புதமாத்தேளியுலா மெழிலேநோக்கிப், பொய்க்கானபவந்தெறுநீர்குடைந்துமு ருகனைப்போற்றிப்புல்வன்போனான். (உஉ)

இத்தகையபுலவனென்றுஞ்சரவணப்பூந்தடங்குடைந்துமெ ழிற்செவ்வேளாம், வித்தகன்பாதம்பணிந்துங்கூடல்வதிந்தீற

றிலேவீடுபெற்ற, னத்தகைமையருள்வரத்தாற்குமரனிளை
யோனெனவேயறையுஞாலம், புத்தமுதமெனப்பழிச்சும்புல
வனிருந்தகைமையெம்மாற்புகலற்பாற்றே. (உ௩)

வேறு.

மட்டுவிரியுங்குழலுமையைவள்ளன்மணக்கவருவித்துஞ்
சுட்டிவிதியைச்சிறைபுகுத்தியகிலம்பயக்கக்கோலுவித்தும்
பிட்டமதிபோலெயிறுடையபெருஞ்சூருடன்கேளவிந்துவிட
நட்டவினம்போற்கலந்தவுணருண்மைபலவுநன்குரைத்தும்.

கட்டுக்கடம்பன்மனக்குறிப்பைக்களிக்கமுயன்றுவருவித்து
ஞ், சிட்டர்பரவும்பரங்கிரியின்சிறப்புமொழிந்தெண்டிசைவி
ரித்து, மெட்டுமகதவிசையமுதமிட்டுச்செவியைக்குளிர்வி
த்தும், வட்டவுலகிற்கனத்தவர்பான்மகிழுந்தொண்டுபலவி
ளைத்தும். (உ௫)

இனையபலவாஞ்செயன்முடித்தோனிருதாண்மலரொன்முடி
சும்க்கப், புனையுந்திருநாரதனைமகிழ்பொங்கிவிழியின்கருணை
தந்து, தனதுபக்கத்திருக்கவரந்தந்தானடியாற்கெளியசெவ்
வே, ணினையுந்தொறுமற்புதமெனக்கேநிறைக்குமுலகோர்க்
கெதுவாமோ. (உ௬)

கூ-வது, நற்கீரச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-கூ-க்கு-கூடியதிருவிருத்தம்- ௬௱க௮.

---

பத்தாவது,

## சூரச்ங்காரச் சருக்கம்.

---

அஞ்சொலான்சைவபுராணத்துளாறதிகத்தைச்
செஞ்சொலூறியதமிட்படுத்தினசெழுங்கீர
னஞ்சல்செய்தபின்செய்யுள்கொண்டிடுங்கதையறைந்தாம்
விஞ்சுகாந்தத்திற்குகன்மணம்புரிந்ததுவிரிப்பாம். (க)

முன்னமோர்பகற்குமரவேள்சூர்தனைமுடிக்கப்
பன்னுமாலயன்முதலியோர்கணத்தொடுபடர
மின்னுதேரினைக்கடாவியேவெய்யதான்றணந்து
மன்னுவேலையின்மூவிருமாதரும்வந்தார். (உ)

நீணிலத்துறுதத்தனே நிகணந்திபரிதி
பாணியேசனுமுகன்றவமாலியாம்பனவர்
மாணிரைத்தவர்வந்துசெவ்வேளடிவணங்கப்
பூணிறைத்திடுமெகபதியவர்செயல்புகல்வான். (௩)

அருந்தவம்பெறுபராசரன்சிறூர்களாமறுவர்
திருந்திளம்பருவத்தினிற்சரவணத்திருநீ
ரிருந்தமீனுகண்டிருந்திடமூழ்கியேவினோதம்
புரிந்துமீன்பிடித்துணங்கிடப்பாறையிற்பொழிந்தார். (௪)

பசும்பரித்தொகைகடவுதேர்ப்பண்ணவனுச்சி
விசும்படைத்திடப்பராசரன்கடன்செயன்மேவா
வசைந்ததிவினைபுரிந்திடுகுமரரையெதிர்கண்
டசைந்தவேணிகொண்டடைந்தவன்சாபமிட்டருள்வான். (ரு)

துடித்துலாங்கயலாகிநீர்சுலவுதிரொன்ன
வடித்தலம்பணிந்தெங்குறையசுலுநாளேதென்
றுடைத்தநெஞ்சினர்புலம்பிடவுவப்பொடுமுனிவன்
வடித்தசெந்தமிட்குமரவேண்மருவுமித்தடத்தில். (சு)

அந்தநாள்வருங்குதலைவாயம்பிகைமகவைக்
கந்தமேவியகைகளக்கனமுலைசொரிபால்
சிந்தவேதிவலைத்துளியருந்தியேநீவீ
ரிந்தமாவினைதடிதிரொன்றேகினன்பாலர். [எ]

அத்தடத்தினிற்சேலுருவனைந்துலாங்காலை
தத்தமக்கெழுநன்மைசேர்காலங்கள்சார்ந்து
மெய்த்தவத்தினராகினர்விமலநிற்கண்டோர்
முத்தராவர்கள்வினைவிட்வரியதோமொழிவாய். (அ)

அந்தமென்மைகொண்டிவர்களுமருளடைந்தவரா
யிந்துபுத்தமுதொழுகியபரங்கிரியிடத்திற்

கந்தவேளுனை நோக்கியேதவம்பலகண்டா
ரெந்தைகேளெனவறுவரும்பின்றுரவிசைத்தார். (கூ)

இமிடிரைக்கடலேத்தல்போலிரைத்தலைக்கரத்தா
லுமிழுமுத்தமாமணிமலரிறைத்துவந்திறைஞ்சுந்
தமிழ்மணத்திடுஞ்சீரலைவாயெனுந்தலத்தி
லமுதெழுந்திடுதலைவாயமலன்வந்தடைந்தான். [௧௦]

பிட்டமாமதிப்பிளவுபோலெயிறெழுஞ்சூர
னட்டகேளொடுமெமரிழைத்திடநகையரும்பித்
தெர்ட்டவாழியினடந்தவைதொலைத்துவெங்கணத்தோர்
வட்டஞாலத்தையதிர்தரக்குமரவேண்மகிழ்ந்தான். (௧௧)

குருதிகக்கியகுடுமிவேற்கொருபணிகொடுக்கச்
சுரரொடுற்றுவாய்சோரியுமம்மணமடுக்க
வருமணங்கனுர்தழுவுகைவளர்பிணந்தழுவ
வெரிமத்ணிதிரண்முடித்தலையெலும்புகொண்டிருள. [௧௨]

சந்துகுங்குமந்தங்கியமார்புசெங்குருதி
வந்தசேரரமாதர்கைபுடைத்திடுதுடையி
லந்தரத்தெழுபருந்துவாய்வழுவுமுணடுக்கக்
கொரந்தெழுந்தபூவணையெனக்குஞ்சிமேற்கிடப்ப. [௧௩]

வென்றிவாகையம்புயங்குடர்மாலையான்மிலையத்
துன்றுமுத்தணிமார்புபல்லெலும்பொடுதுதைய
மின்றிரந்தவாரங்களாய்மென்கொழுப்பணியக்
குன்றமென்றசூர்கேளொடுகுவலையத்துருள. [௧௪]

வீழ்ந்திடும்படியவருயிர்விருந்தருந்தியவே
லாழ்ந்தவெண்டிரையாழிநீரருந்தியெங்குகனைச்
சூழ்ந்திறைஞ்சியேசூரியர்கோடிபொற்சுடர்போல்
வாழ்ந்தசண்முகன்கையினில்வளர்ந்ததுமன்றே. [௧௫]

சூரையட்டபின்மாலயன்றுதிமழைபொழிந்து
சீர்கொள்பூசனைசெலுத்தினுர்குகன்மொழிப்படியே

பார்கெழும்பரங்கிரிசெலவூர்தியிற்பட்டர்க்தா
ரோர்கெழுங்குகன்மாமயிலேறியேகினனுல். [சசு]

தேனலம்பியகடம்பணிசிற்பரன்வந்தா
ஞானமங்கையைமணஞ்செயுமறுமுகன்வந்தான்
கானவேதனைச்சிறையிடுங்காரணன்வந்தான்
வானமங்கையர்தாலியைத்தந்தவன்வந்தான். [சஎ]

செருவில்வெங்கொடுஞ்சூரனைச்செகுத்தவன்வந்தான்
கருதுமன்பருக்கூறியகருணையான்வந்தான்
சுரர்கள்மாமுடிதழும்பிடுந்துணைப்பதன்வந்தான்
வரதன்வந்தனனென்றுசின்னம்பணிமாற. [சஅ]

பவனஞ்சிடமயிலெனும்பரிதனைநடத்தி
நவையிகந்தகாவதம்பலதணந்துநம்முருகன்
சிவமெனும்பரங்கிரிவிழிகண்டிடச்சிந்தை
யுவகைபொங்கினன்புங்கவருவந்திறைஞ்சினரால். [சகூ]

திருவுளங்களிபொருந்தியதிருப்பதியாறுள்
வருமுதற்பதிபரங்கிரியடைந்தனன்வதிந்தான்
சுரர்கள்கம்மியன்சுந்தரம்பழுத்தபொற்கோயின்
மருவுதேவருக்கியற்றினன்மனமகிழ்ந்திருந்தார். [உ0]

இருந்தகாளினில்வேலனைக்காணவாயிரங்கண்
பொருந்துமிந்திரன்புதல்வியையாறுமாமுகற்குத்
திருந்துமாமணஞ்செய்துகைம்மாறெனச்செலுத்தப்
பொருந்தயாவொடுமொழுடன்விதிக்குரைபேச. [உக]

அந்தவாசகங்கேட்டுமொலயன்முடிதுளக்கிக்
கொந்துலாவியகடம்பணிகாரணன்கோயி
லுந்திருடியிறைஞ்சியேசூழவந்துவந்து
தந்தையேயெமக்கொருவரந்தருமெனப்பணிந்தார். [உஉ]

பணிந்தகாலையிலெழுமெழுமென்றுனாபகர்ந்து
தணிந்திலாவிருப்பாகியேசாற்றியவார்த்தை

யணைந்தகூறுமுன்னுணர்ந்தனமெனநகையரும்பித்
துணிந்துரைத்தவானவர்க்கருள்வழங்கினன்றூயோன். [உரு]

அக்கணத்தினிற்புறம்புபோயமரர்கோமானு
மிக்கவொற்றனைக்கூவியேயண்டங்கண்மேவித்
தக்கவானவர்மாதவர்தமைப்பரங்கிரியா
மிக்கவெய்திடக்கூறுமென்றேயிசைத்திட்டான். (உசா)

உண்மையாகியதேவருளொருவனையழைத்து
வண்மைசேர்மகண்மனைவியைக்கொடுவருகெனப்போய்
விண்மகிழ்ந்திடவருதெய்வயானையார்மேதைத்
தண்மலிந்திடுபொய்கையிற்றவமிழைத்தருளா. (உரு)

எந்தநாளெனைக்குமரவேண்மணஞ்செயுமென்று
சிந்தைசெய்திடுபெண்கிளிசெவிகுளிர்ந்திடவே
வந்ததூதுவன்சோபனங்கூறிடமகிழ்ச்சி
யுந்துவெலையின்மூழ்கினள்தாயுடனுவந்து. (உகூ)

வெண்முகிற்படர்மின்னெனவெண்கரிகட்வித்
தண்மலிந்திடுபொய்கைசூழ்பரங்கிரிசார்ந்து
பண்மலிந்திடுபவளவாய்க்குயில்வரப்பதுமை
யெண்மிகுந்திடுமணங்கினொதிர்தழீஇக்கொண்டார். (உள)

வாழியென்றுவிண்ணவர்குழாமாதர்களொலிக்க
வூழிரும்பயனென்றுகோன்கம்மியற்குரைத்துச்
சூழும்வீதிகள்புறஞ்சமையென்றிடத்துய்ய
வேழமேறுவான்களித்திடவியநகர்சமைத்தான். (உஅ)

தணிவிலாமறைசாற்றுவோர்வீதிமாமுடியின்
மணியிருட்குழாங்கிழித்திடுமன்னவர்வீதி
யணிபெருந்திருவணிகர்கள்வீதிவேளாண்மை
திணிநிலம்பிளந்தியற்றுவோர்வீதிசெய்தனனால். (உகூ)

வேறு.

இமைத்தமாமணியழுத்துமெழின்மணிமாடச்சுண்ணத்
தமைத்தபொற்சிகரக்கும்பமணுகுபாற்கடலினுப்பண்

கமிழ்த்திருள்கிழித்தபானுக்கசெக்குமம்மாடமீது
சுமத்தியமேகமாயன்றுணைவிழிமுகிழ்ப்பதொக்கும். (௩௦)

பொங்கழகெழுந்தவாயிற்பொலிந்தகோபுரத்துநெற்றி
தங்குசெம்மணியின்பாங்கர்தரளம்வச்சிரமேகண்க
ளங்குறுவெள்ளைமேகமடலையங்கவையின்சென்னி
தங்கிடமதியங்கங்கைதழுவிடப்பரமன்போன்ற. (௩௧)

மகரதோரணத்துநெற்றிவயங்குகண்ணாடிபானு
நகுவெயில்விரிக்குஞ்சோதிநாற்றுகித்திலத்தின்கோவை
தருநிலாப்பொங்குமந்தத்தயங்கொளியொன்றோடொன்று
பகைபெறுமன்றிமற்றைப்பகையிலைநகரின்மன்னோ. (௩௨)

கொடிக்கழைக்கரங்களாட்டிக்குளிர்முகமுடையமாதர்
நடித்தல்போன்மணித்தேர்சூழநாடியேதம்பமாக்கள்
கடிக்கமழ்சென்னிமீதுகொடியெனக்கலையைவேய்ந்தோர்
துடித்தெழுபார்வைபோலத்தோரணக்கயிறுநீடும். (௩௩)

தரைதனில்வைக்கவோங்குந்தம்பமான்முதலினோர்கை
மருவுதோரணம்பன்னாகம்வீக்கியமணித்தேர்வெற்பைச்
சுருதிவாய்மிழற்றுமோசைத்தொன்னகர்க்கடலிற்பாச்சித்
திருவிழாவமுதங்காணச்செய்யவன்போலுமன்றே. (௩௪)

மாளிகைமுன்றில்வேதிவகுத்ததினடுவேவைத்த
நீருநீர்க்குடங்கண்மீதுநிரைதழைதழலாமீசன்
மூளுவெங்காற்றசைக்கமொழிந்துநீள்வரத்தைத்தந்து
வாளிருஞ்சோதிகான்றுவளர்குவான்போலுமன்றே. (௩௫)

நிறைகுடம்பாங்காவைக்குநிரைமணிவிளக்கின்சென்னி
யறைதருகாற்றுற்கம்பமணுகிவெங்கொழுந்துதாவல்
கறைகசிந்தூறும்வேலோன்கருதியேயுறையுமூரி
லுறைவரையணுகொண்டதென்றும்பர்போங்கேதுபோன்ற. ()

சேண்முகடணுகுந்தேரில்வீக்கியமாலைத்தேனை
யோணமீன்பக்கமேவியொளிர்பிறைதேவியாக

நாண்மதிமுகவின்மாதரமுதினுநலத்தவாகி
மாணுறக்கொள்வதாகவளர்ந்தனவீதியெல்லாம். (கஎ)

அறைதுதற்கரியதானவழகியகுமரன்மன்றல்
பெறுவதற்கெழிலின்வீதிபேரழகியற்றுங்காலை
மறுவறுதிசையில்வானோர்வளர்முசுகுந்தனாதி
குறைவிலாமுனிவரேனோர்குறுகியேபரங்குன்றுற்றார். (கஅ)

கO-வது, சூரசங்காரச்சருக்க

முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம்-கO-க்கு-கூடியதிருவிருத்தம்-சடுகூ.



பதினொன்றாவது.

## திருக்கலியாணச்சருக்கம்.



தேர்துளும்பியசொற்குமரவேள்சூரைச்செகுத்தபின் பரங்கிரியடைந்து, வேந்தர்கோன்மருவும்வரமளித்திடுங்கால்விண்ணவர்மண்ணவர்விரைந்து,போந்ததும்புரத்தினணிமையும்புகன்றேம்புலங்கெழுமுருகவேள்தெய்வக், கூந்தலம்பிடியைமணம்புரிந்துவகைதுலவியகாதையையுரைப்பாம். [க]

வண்டுகிண்டியதண்டுளவனுங்கடவுண்மன்னனுங்கூறவேமயனு, மெண்டிசைபுகழமாமணக்கோயிலியற்றினன்சனகமால்வரையுங், கண்டுநாணுறவேமண்டபமுகட்டிற்கதிர்பலகோடியர்போன்று, யண்டரண்டங்களிருளொடுத்துண்ணவருண்மணிக்குடம்பதித்தனனால். [உ]

நவமணியிழைத்தகோபுரமேருநாற்றிசைவாயிலிற்செறியக்குவைசெய்மண்டபத்துநாகமாமணிகள்குலவுமுததிடையிடைவிக்கி, வயிரவெள்ளாடியிட்டிமைத்திடவேவல்லிருள்சுருட்டியேவிழுங்குர், தவனகோடியர்போற்பீடிகைநடுவேதகுமணிப்பீடம்வைத்தனனால். [ங]

வயின்வவிற்செய்தவளைகளிற்பீடம்வகுத்துவெண்சாமரைதூ
க்கி, வெயில்விடுநவமாமணியைநாற்றியபின்விளங்குதூணிரை
த்தனமுழுதுங், குயிலுடன்பசியகிளிகள்சேர்கமுகுங்கூட்டிய
வாழையுங்கரும்புஞ், செயிரறுசூட்சிப்பொம்மையோவியங்க
ள்திசைதிசையெங்கணுமியற்றி. [ச]

பரதநாடகத்தைத்தருஞ்சிலபொம்மைபாண்மிழற்றிடுஞ்சில
பொம்மை, யிருகையாற்றுளம்புடைக்குமோர்பொம்மையிலா
குபாய்ந்திடுஞ்சிலபொம்மை, சுருதியையிசையாய்ச்சொலுஞ்சி
லபொம்மைதுடையறைந்தசையுமோர்பொம்மை,வரிசையாய்
க்கதைச்சொல்வகுக்குமோர்பொம்மைவட்டமிட்டாடுமோர்
பொம்மை. [ரு]

இன்னரியெடுத்துத்தெரிக்குமோர்பதுமைகேடசஞ்சுழற்று
மோர்பதுமை, மன்னியகதிர்வாள்விதிர்க்குமோர்பதுமைவலி
யகட்டியஞ்சொலும்பதுமை, தன்னிலேகுகன்சீர்சாற்றுமோர்
பதுமைதலையசைத்துலவுமோர்பதுமை, பொன்னணிகவரியிர
ட்டுமோர்பதுமைபுதுமையாய்விசிறுமோர்பதுமை. [சு]

மண்டபமுகட்டினுற்றியமாலைமதுவொழுகியவொழுக்குட
னே, யண்டர்மாமகுடக்கற்பகமாலையணிநறைவிழுந்துசேறெ
ழுப்பத், தொண்டைவாய்மூரல்வானமங்கையர்கடுணைமுலைய
ணிந்தகுங்குமத்தூள், விண்டுகவிறுகிநடைபெயர்த்திடுவோர்
விரைமலர்த்தாளடிபதியா. [எ]

செவ்வரியெழுந்தோட்டாயிரங்கதவந்திறந்துபுக்கிருந்தபெண்
கோடி, மௌவல்வெண்ணகையவாணியுங்கோடிவானமங்
கையர்களுங்கோடி,யவ்வியமகன்றமூளைத்தபாலிகைகளாதிய
மணத்தொழிலியற்றப், பௌவமேழுடுத்தபாரெலாம்பயந்தப
துமநாபியன்முதலானோர். [அ]

மன்றலிற்குரியவகையியற்றியபின்வானவர்தமதெனக்கொ
ண்டு, துன்றிடத்திங்கள்பன்னிருபதங்கர்சோதிசெய்விளக்கி

டெலியக்கர், நன்றெனவிசையைமிழற்றவிண்மடவார்நாட்கந்தி சைதிசைகுனிக்கத், தென்றலங்குழவிதத்தடியிட்டுத்திருமண ப்பந்தரினுலவ. [கூ]

பாசடையுடுத்தவரசுவைத்திடுவார்பாலிகைநிரம்பவைத்திடு வார், மூசொளிகிழிக்குமணிவிளக்கேற்றிமூலைகடோறும்வைத் திடுவார், வாசமார்களபக்குங்குமச்சேறுமருவுபொற்கிண்ணம் வைத்திடுவார், தேசவிர்செம்பொற்குடத்துநீர்வார்த்துமாந்த ழைசெறியவைத்திடுவார். [க0]

பல்லியங்கறங்கக்கிளர்த்துவார்சிலர்கள்பங்கயன் பக்கலிலோ ரைச், சொல்லெனத்திரண்டுவினவுவார்சிலர்கள்சொல்லியமு கூர்த்தமீதெனவே, யெல்லவிர்மணியையிருவர்க்குமணிய வெ ழுமெனச்செப்புவார்சிலர்க, ளொல்லையிற்கருமங்கிளத்துவார் பிளிறலுவரியொத்ததுமணப்பந்தர், (கக)

செயவகையியற்றித்தேவகுஞ்சரியைச்சேர்ந்துபூமகண்முதலா னோர், துய்யவெண்கலையில்வடித்தெடுத்தெறியுந் தூயகங்கை யைமணங்காட்டிப், பையவேயம்மைகுழல்வருந்தாட்டிப்பரி வொடுதடித்தையேவெளிய, மைவளர்ந்தெனவொற்றுடையா லொற்றிவண்டிருமேனிநீர்சுவற்றி. [கஉ]

இலங்குமின்னரைக்கீழ்வாலசூரியன்போலிமைத்தசெம்பட்டி னைவீக்கித், துலங்குபொன்சிவிறிக்காற்றினற் குழலைத்தூற்றி யேவகுந்தபின் னுணக்கிப்,பொலங்கெழுமகிலாதியபுகை யூட் டிப்புதுமணச்சாந்தினற்கோதி, யிலங்குகாருடுக்கள்சேர்ந்தெ னக்குழன்மேலிமைத்தநித்திலங்கள்கோத்திணக்கி. (கங)

தந்தையைச்சுமந்தநீலமேகத்தைத்தான்சுமந்தனையபூங்குழலி ற், சுந்தரவிரவியெனுந்தலைப்பணிகள்சுமந்திடக்கூந்தலை முடித் தே, யிந்துவையிளமைதனிற்பணிதீண்டிற்றெனநுதற்சாந்தமு ஞ்சாத்தி, யந்திலப்போதிற்பனிப்பருந்துளிபோலட்டகநாசிமு த்தணிந்து. [கச]

கருவளைபுரும்பான்மிதந்தநீலம்போற்கண்பெறவஞ்சனந்திட்டிச், திருமுகமதிமேற்பவளமேபோலுஞ்செயிதழ்மணிநகைபாய, வருமுகமலரில்வண்டுமொய்த்ததுபோன்மருவுகண்ணேறுருமறுவை, யருள்கபோலத்தில்வைத்துமங்கையர்கண்ணாடியையேந்திநின்றனரால். [கரு]

வட்டமாமதிக்கீழ்ச்சூரியன்வரும்போல்வாளியுங்கொப்புநற்றோடு, மிட்டுநற்கமுகைமின்னுடுத்ததுபோற்கழுத்தெழுமங்கலக்காறை, தொட்டிடவணிந்துதோற்றியகிரியேயடைந்திடுந்தொல்வரையிருபாற், கிட்டிடநடுவேகிடந்தசூரியன்போற்கிளர்முலைநடுப்பணிசாத்தி. (கசு]

வாணிவிண்மடவார்சரிவளையாகிமருவலர்த்துணித்திடவுரையென், றாணியேகையைப்பிடித்துரைப்பவர்போலொளிர்வளைபொற்சரிசாத்தி, மாணெழுங்கையின்மார்பினிற்பலவாமணிக்கலனிமைத்திடச்சாத்திக். கோணிடைக்கூறையுறுதிநன்றெனவேகூறியமேகலைச்சாத்தி. [கஎ]

சுமையையமாற்றிடுவோன்றேவியென்றுரகஞ்சுடர்மணியேந்தியேபொன்னு, லமைசெய்பாடகமாமெனப்பதஞ்சாத்தியன்னங்கள்பொம்மெனவுரைத்தே, யிமைசெயுந்தண்டைநூபுரஞ்சாத்தியிருபதநகமெனு மதியைத், தமரவெண்கதிரோன்சிற்றுருப்படைத்துத்தணிதல்போல்விரற்பணியமைத்தார். (கஅ)

செய்யவாய்க்கிளியாந்தெய்வயானைக்குத்திருக்கலன் சாத்திமற்றவையு, மொய்யெனவியந்திமாலயன்முதலோருடையவன்கோயில்புக்கிறைஞ்சி, யையநீவருகவேண்டுமென்றியம்ப வதற்குநன்றெனத்தலைதுளக்கிப், பையராவணையான்மாமணியிழைத்தபணியெடுத்தணிகுவான்மன்னோ. [கக

தந்தைமாமதியைச்சூடினனெனவேதவனனுமணிமுடிசாத்தி யந்தரவானோர்பகையெரித்திடவேயழலெனத்திலதமுஞ்சாத்தி, யிந்துமாமுகஞ்சேர்பன்னிருகதிர்போலிமைத்திடு மணிக்குழைசாத்தி,வந்திடும்புகழ்போலனேவருங்காணமணித்தொடைநித்திலஞ்சாத்தி. [உ0]

தந்திடுஞ்சுமைமாற்றினையெனச்சேடன்றழீஇயெனத்தோட் பணிசாத்தி, யுந்தியவெள்ளிவிஞ்சுதானவனையுவந்திட்டபொ ன்னுருப்படைத்து, வந்தெனக்கடகமுன்கையிற்சாத்திவலிய தாருகனுரத்தாழி, முந்துறப்பணித்ததென்றபூணுடனேமொ ய்த்தபூணிலகிடச்சாத்தி. (உக)

மாமடியெனவேபெற்கலைசாத்திமாமறையாயிரந்திரண்டு தாமுறையிடுநூபுரம்பதஞ்சாத்தித்தண்கதிர்பழுத்தவாபரணம் பூமகண்மணாளன்முருகவேண்மேனிபுனைந்தனனந்தநாண்மு ருகன், காமர்சேவடியைக்கண்டிட்டவிமையாக்கண்பெருவான வர்களித்தார். (உஉ)

சலதியேழுடுத்தபுவிமகளிழைக்குந்தவப்பயன்பரங்கிரிக்குமர ன், மலரடியேத்திவேதனுதியர்கள்வாய்புதைத்தெழுந்தரு ளென்னப், பலமணிகுயிற்றும்பீடிகையிழிந்துபங்கயன்செங் கையைப்பற்றி, நிலமிசைப்போதமாயவன்முதலோர்நெருங்கி யேயார்ப்பரித்தனரால். (உங)

பணிமுடிநெளியநடஞ்செயுமயூரப்பரிமுதுகேறியூர்ந்திடுங்கா லணிமலர்பொழியத்துந்துபிளிரவண்டகடாகமேநெரியத் தணிவிலதிமிலைசல்லரிபம்பைடக்கைபேரியமொடுபடக [ங்க. மணிகொள்வீராணந்திண்டிமட்டாரவாச்சியந்தமுக்கிவைகற

வளர்பிறையெயிற்றுப்பூதர்கூத்தாட்டமங்கையர்மங்கள மியம்ப முளரியங்கண்ணனுதியருடுத்துமுன்வருமூர்தியிற்படர விளையுடுப்பொறியிற்கொறிக்கவங்காந்தவியந்தருக்குட்கொ டிபடாத், தளரிடையரம்பைமார்நடம்புரியத்தண்மணச்சினக ரம்புக்கான். (உரு)

போந்தபின்மயில்விட்டிழிந்தசெவ்வேளைப்புலோமிசையேத் தியேவாணி, தேன்றுளும்பியபால்கொடுத்திடவாங்கி மருகனு ர்திருவடிவிளக்கி, யார்ந்தவெண்கலையாலொற்றிமாமாலையணி ந்தபின்மணப்புகைகாட்டிச், சாந்ததிபத்துத்தட்டதுசுத்தித்த னதுளநாணியேகினளால். (உசு)

மருக்கிளர்மாலைநாற்றியதெரியன்மாமணக்கோயிலினடுவே யிருட்பிழம்புடையவிமைத்திடுஞ்சோதியெழின்மணிப்பீட் மேல்வைகித், திருக்கிளர்மார்பன்முதலினோரிருக்கச்செப்பிட மாமணிப்பீடம், பொருக்கெனவிருந்தார்மற்றைவரனவர்கள் பூங்கரமுகிழ்த்துநின்றனரால். (உஎ)

இப்படிநிகழுந்திருமணங்காணவிளம்பிறைகங்கையாலொது ங்குந், துப்பெழுஞ்சடையான்மலையினிற்பிறந்ததோகையை வருகெனவிளைந்தே, யொப்பரிதானகணங்கள்சேவிப்பவொ ளிர்மணித்தேரினைக்கட்விச், செப்பருஞ்சீர்த்திப்பரங்கிரியணை ந்தான்தேவர்கள்கூடியார்ப்பரித்தார். (உஅ)

வண்டுழநறவுகொதித்தபூங்கடம்பமாலையானளவிலர்வுவகை கொண்டுதாய்தந்தையவரொதிர்குறுகிக்குலவுபன்னிருவிழிதே னை, யுண்டிடக்களிக்கும்வண்டெனநோக்கியுபையதாளருச்ச னையிழைத்துத், தண்டவிசேற்றவெடுத்தணைத்திறுகத்தழுவி யேயுச்சிமோந்தனரால். [உகூ]

உலகமீன்றெடுத்தகன்னியோட்மலனுவப்பொடுமகன்கரம்ப ற்றி, நலமெழத்தவிசிலிருந்திட்வைகிநளினமாளிகையுறைக டவு, ளலைகட்ற்றுயின்றோனுதிவிண்ணவருமடிபணிந்தருச்ச னையிழைத்து,மலைபெறுமகளார்முலைமுகட்ழுந்துமார்பனையே ந்திநின்றனரால். [௩0]

கூன்பிறைக்கோட்டுக்கரிமுகன்பெருத்தகுடவயிறெழுந்துபூ ரிக்கத், தேன்பிலிற்றியபூங்கோயிலான்றெங்கம்பழங்களையு டைத்தருச்சித்து, வான்பெருகழலையோம்பிநால்வேதம் வடித் தெடுத்திடுமெனுக்கூறி, யான்பெருகியநெய்சமித்தொடுதருப் பையனைத்தையுமிருபுறத்தமைத்து. [௩க]

அங்கியின்கருமத்தேத்தியபொருளாலாகுதிபலபலவியற்றிப் பங்கயன்விதித்தவோரைவந்தணுகிப்பல்லியங்கடலெனச்சற ங்கக், கொங்கவிழ்துளவன்குலிசனைநோக்கிக்குளிர்கிட்ந்தி றைத்தசொற்குயிலை, யிங்ஙனம்விரைந்துகொடுவருகென்னவி ந்திரனெழுந்துபோயினனால். [௩உ]

அடைந்துதன்மகள்பாலெய்தியங்கண்ணேவரசிள வன்னமே யமுதே, தொடர்ந்துசேர்தவமேதவப்பெறும்பேறேசோதியின்கொழுந்துவிட்டெழுந்து, படர்ந்தபைங்கொடியேபச்சிளங்கிளியேபார்த்திடுந்தொறுந்தொறுமினிக்க, நடந்தசித்திரமேநங்குலவிளக்கேநன்மணஞ்செயவருகென்முன். [ருங]

வரைந்திடாவேதமிசைத்திடுங்கணிதம்வடித்தெடுத் ததிற்பிழிந்தெடுதத, பொருந்தியவோரைவழாதெழுங்காலைப்பொருப்பெனப்பணைத்திறுமாந்த, பெருந்தனபாரக்குட்ச்சுமைக்கிளைத்தேன்பிழைக்கரிதெனவிடைநுடங்கி, நெரிந்திடப்புனைமேகலைகிடந்தரற்றநிலத்தின்மெல்லெனவடிபெயர்த்தாள். [ருச]

வெளியபட்டாடைமுன்கையிற்பொதிந்துவிதியுலகோர்கரங்கொடுப்ப, முளரியங்கண்ணனுலகமாமடவார்முன்னராய் மங்கலமிசைப்பக், களிபெறுமியக்கநாரியர்குளிர்ந்தகாற்றெழுங்கவரியையிரட்டக், குளிர்மதியிரவியுலகமாமடவார் கோடியர்சக்கிரநிழற்ற, [ருரு]

சூரணங்கினர்கையடைப்பைகொண்டிலையின்சுருள்கொடுதருகினிற்படர, வாரழற்பதியரிருளெடுத்தூரிஞ்சுமனந்தமாம்பந்தங்களேந்தச், சேருடுவுலகோர்கனியிதழ்துடைக்குந்திருக்கலைதோளமைத்துலவ, நீரொழிற்பதியார்கங்கைநீர்புகட்டுநிரைமணிச்செம்பெடுத்தியங்க. [ருசு]

மருவுகாற்றுலகோர்விசிறியின்விளிம்புமணித்தகட்சைத்தசைத்தணுக, நிருதியினுலகோர்செய்யவாய்துமிக்கு நிறைந்தபொற்படிக்கமதேந்தக், கருதுகூற்றுலகோர்செங்கையாலத்திகாட்டியேதிசைதொறுங்குவிக்கப், பொருவில்காந்தருவநாரியர் வீணைபொருந்துபாண்மிழற்றிடத்தெறிக்க. [ருஎ]

மற்றையவணங்கோர்நொய்யபட்டெனும்பாவாடையை மகிழ்ந்துமுன்விரித்துச், சிற்றுளிநிரம்பும்பனியினீர்பிலிற்றித்திரண்டபூச்சிதறியேபரப்பப், பற்றியபுவனநாயகிவந்தாள்பாவை

யர்சிரோமணிவந்தா, ளற்றுநீர்த்தடஞ்சூழ்பரங்கிரிவந்தாளெ
ன்றுசின்னம்பணிமாற. [௩அ]

எளியனேனெஞ்சத்திருந்திடர்ச்சிவந்தொத்திருந்திடப்பஞ்சி
டச்சிவந்த, குளிர்பொதிதாளிற்சிலம்புவீறிட்டுக்குளறிடக்குறு
நடைபெயர்த்து, வெளியதோரன்னப்பேடெனவருங்கால்வி
ண்ணவர்மகுடகோடிகளி,னளிர்பெறும்பிரம்புகலீரெனவோ
ச்சிநாரியர்பரிசனங்கிளத்த. [௩௯]

உண்டிடவுவட்டாதெழுந்தபுத்தமுதே யூற்றெழப்பழுத்ததீங்க
ரும்பே, வண்டெழாதலர்ந்துவளர்ந்தபூங்கொடியேவடித்தி
டாத்தெளிந்தசெந்தேனே, யெண்டிசைவிளக்கவருந்தனிவி
ளக்கேயினித்தினித்தருந்துகற்கண்டே, மண்டலம்புகழவள
ர்ந்தபெண்ணரசேமறுவெழாதெழுந்தபேரொளியே. [௪0]

மழலையங்கிளவிதுளும்புவாய்க்கிளியேமரகதப்பசியமாமயிலே
யொழுகுதேனூறியுவட்டெழுங்கனியேயொளிகிடந்திமைத்
தபொற்கொடியே, தழையிசைசெழும்பாண்மிழற்றியகுயிலே
தளிரொழுந்தசைந்தபூங்கொம்பே, யெழுமிருட்படலங்கிழித்த
மாமணியேயெழுதரிதானசித்திரமே. (௪௧)

இன்னனகூறிக்கட்டியம்பொலிவோரிரண்டருகும்பிரம்பேந்
திப், பொன்னனுரொழுங்காய்ப்பயப்பயநடக்கப்பொற்சிலம்
பரற்றியேபுலம்பத், துன்னுவானுடுச்சூழமுதமூற்றெழும்புஞ்
சுடர்மதியெனநடைபெயர்வா, ளென்னையாள்செவ்வேளற்பு
தம்விளக்கவெழின்மணிச்சிணகரம்புக்காள். (௪௨)

மன்றல்மண்டபத்திற்புக்கபின்கடுக்கைமாலிகைவீக்கியசடை
யான், குன்றிலின்முளைத்தகொடிபதம்பணிந்துகுவித்தகை
கொடுவலஞ்சூழ்ந்து, முன்றிகழ்ந்திடவேசுமங்கலம்பெறு
வையென்றவர்மொழிந்திருத்திடுங்காற், றன்றிருமுகஞ்சாய்த்
திருந்தபின்கடைக்கண்டழைந்தவாதரத்தொடுபார்த்தாள். ()

மாமிபுன்மூரல்விளக்குமென்பதற்கோர்வானவர்திரண்டதெ
ன்பதற்கோ, பூமியின்முறைமைபுரிகவென்பதற்கோபுதும

ணக்கோவிலென்பதற்கோ, தேமலர்மகள்சொல்வழுவுமென்
பதற்கோதிருப்புகுமுன்னமென்பதற்கோ, தூமலர்வதனத்த
ழகுதிக்கெறிப்பச்சுடர்க்கொடிமுகங்கவிழ்ந்ததுவே. (சச)

அப்பொழுதரிவைகடைக்கணுற்பார்க்குமருள்விளைந்தழகுட்
னெழுகத், துப்பமர்கனிவாய்நகைநிலவொழுகச்சுடர்ப்பணி
கதிர்பழுத்தொழுகச், செப்பருமுலைக்குன்றிரண்டின்மேலெ
றிக்குந்திங்கள்போன்முகங்கவிழ்ந்திருக்கு, மொப்பரிதானசி
த்திரவுருவையும்பர்கோன்றலைசிறிதெடுத்தான். (சடு)

அக்கணமிளமையழகுட்னெழுகவண்ணல்பன்னிரண்டுகட்
கடையா, மிக்கதோர்கருணைக்கடலெனப்பெருகிவெள்ளமூ
ற்றெழுந்துமிக்கொழுகப், பக்கம்வீற்றிருந்தகிளிதனைப்பார்த்
தான்பாவியேனவ்வருட்கடலுட். டக்கதோர்திவலைபெருகு
வான்வேண்டிச்சண்முகன்புகழ்விரிப்பதுவே. (சகூ)

இருவரும்விரும்பியிருந்திடுங்காலையிளமதிநுதலயிராணி, பரி
வொடுநாணிப்பணிவிடையியற்றப்பவளவாய்க்குகன்பதபூசை
மருவியீரொட்டாம்வரிசைகளியற்றிவளரடைகாய் கொடுப்பித்
துத், திருமகள்கையிற் குமரர்கையமைத்துச்சிறுவிரற்கோத்
துவைத்தனனால். (சஎ)

பின்னயன்கரிமாமுகன்பதபூசைபேணிவித்தறுமுகன்கையி
ன், மன்னியபொருளீந்தழல்முகட்டதனின்மந்திரவாகுதிசெ
லுத்திப், பொன்னெழின்மார்பன்சொற்படிக்குகற்குப்புலோமி
சைகொடுத்தநீர்மகவான், றன்னெழின்மகவைத்தத்தமென்
றிசைத்துவார்த்திடத்தடங்கையேற்றனனால். (சஅ)

பழிச்சுவோர்தமக்கும்பரவினோர்தமக்கும்பதமலர்ப்பூசை
யோர்மலரா, லிழைத்துளோர்தமக்குநால்வகைப்பொருளுமீ
ந்திடும்பராபரக்கடவுள், குழுச்செயுஞ்சுரர்கோனெழுக்குநீர்
கொண்டான்குவலயகீதியைமுயலத், தொழிற்செயுமகவான்
பெற்றபேறதனைச்சுராதிபர்சொல்லவல்லவரோ. [சகூ]

வண்டெழுகமலன்மந்திரங்கூறிமங்கலநாணெடுத்துதவக், கண்டுவாங்கியபின்புன்னகையரும்பிக்காரிகைகழுத்தில்வீக்கின்று, லண்டரார்ப்பரித்தார்பூதரார்ப்பரித்தாரந்தரதுந்துபியதிர்ச்சி, கொண்டனநறியபொன்மலர்மாரிகுவிந்தனதிசைதிசையெல்லாம். (ரு0)

இத்தகையியற்றுங்காலைநஞ்சொழுகுமெயிறுடைநாகணைத்துயின்றோன், கொத்தெழுகடம்பமார்பனைநோக்கிக்குளிர்நடைபெயரொனப்பெயர்ந்து, மொய்த்தவங்குரப்பாலிகைகுடந்தீபமுதிர்த்தெழில்விளையரசாணை, வைத்ததுநோக்கித்தேவகுஞ்சரியுமணாளனுமுவலம்பட்ர்ந்தார். (ருக)

பட்ர்ந்தபின்னிருவர்வட்டிசைமுகட்டிலருந்ததிபார்ப்பவர்போலத், தொடர்ந்தகற்பதனையருந்ததிக்குதவிச்சூரியர்கோடியரனையான், மடந்தைதாட்சிலைவைத்திடுதியென்றரியும்வசுத்திட்வம்மியிலழகா, லடைந்தபுன்னகைகொண்டமைத்தனனடியேனகச்சிலையழுத்தியபதத்தான். (ருஉ)

களிற்றினைச்செகுத்தகளிற்றினுக்கிளையகளிறுவான்களிற்றினைமணந்து, தளித்துவெண்டிவலைக்கங்கைவேணியனைத்தொலைவிலாமகிழ்பெறுந்தாயைக். குளித்தவாதரத்தோடிறைஞ்சியேசூழ்ந்துகுளிர்ச்செவ்வாய்மலர்ந்துசொற்பழிச்சி, விளைத்தெடுத்தணைத்துமுத்தமிட்டாசிவிளம்பியேயுச்சிமோந்தனரால். (ருரு)

ஆதியெம்பரமன்களித்துவாழ்த்தியபின்னந்தரதுந்துபிபிளிறத், திதில்பல்லியங்கள்கறங்கவான்களிறுசிவிகையிற்குமரன்யானையின்மேல், வீதிகள்விளங்கவூர்வலம்படர்ந்துவிளங்கியகோயின்முன்னிழியச், சீதனமாகத்தன்கிளைமுழுதுந்தேவர்கோன்குமரனுக்களித்தான். (ருச)

அப்பொழுதமரர்வரனகத்திருந்தேயரியபொற்பூமழைசிதறமைப்பொருமாயனுதியோர்சூழ்ந்துவாழிய வென்றுடன்பட்ராத், துப்பமர்கனிவாய்க்கிளியுடன்குமரன்சோதியஞ்சினகரம்

புகுந்தே, யெரப்பரிதான தந்தைமான்முதலோருற்றிட்நாப்ப ண்வீற்றிருந்தான். (ருரு)

இருந்தகாலையினிற்செந்திருமுதலோரெழில்பெறுசேர்பனங் கூறக், குருந்தின்மீதிவருங்கொண்டல்வானவர்கள்குளிர்ந்த பச்சறுகுதண்டுலங்கொண், டருந்தொன்மாமறையின்மந்திர ங்கூறியருண்மணமியற்றிவானவர்கண், விருந்தயின்றிடவே பூசனையியற்றிவேதனுதியர்துதிபுகல்வார். (ருகூ)

வேறு.

கோலுமீராறுஞாயிறுபோலுங்குண்டலக்காதுளாய்சரணந் சாலநீள்திங்கள்வதனனேசரணந்தயங்குசெவ்வாயனேசரண மேலவேயன்புதனதெனவியாழமிறைஞ்சியவெள்ளியங்கிரி யான், பாலனேசூரற்கசனியேசரணம்பரங்கிரிக்குமரனேசர ணம். (ருஎ)

அரியயன்முதலோர்துதிக்கைபெற்றாருமருள்பதஞ்சொரிந்து நின்விழியாம், வரியளியுலவப்புகர்முகங்கொண்டமார்புடை த்தெய்வயானையினைக், கருதியங்குசங்கொண் டிணக்கியேநீங் காக்காதலாஞ்சங்கிலிபூட்டிப், பருமணிப்புயத்திலணைத்துளா ய்சரணம்பரங்கிரிக்குமரனேசரணம். (ருஅ)

தேமலர்த்தருவைவானவரிருப்பைச்சிதறிடக்கவடுகொண் டோங்கி, யாமெனத்தீமைத்தளிர்தழைத்தோங்கியத்தியில்மு ளைத்துநின்றருளு, மாமரமிரண்டுதுண்டமாய்ப்பிறக்கவளர்தி ருவேல்கொடுதாக்குந், தாமரைப்பூங்கைக்குமரனேசரணந்த மிழ்ப்பரங்கிரியுளாய்சரணம். (ருகூ)

வேறு.

மாவுட்னேசூர்மகளிர்மங்கிலியப்பிச்சையிடுமலர்க்கைபோற் றி, தேவர்சிறைமீளவொருசூரனெதிர்தேரோறுந்திருத்தாள் போற்றி, பாவைபங்கர்திருச்செவியிற்குனிந்துரைக்குமந்திர வாய்ப்பவளம்போற்றி, கோவிறல்சேர்வேலவநின்பரங்கிரியி லிருந்தமணக்கோலம்போற்றி. (கூ0)

வருதெய்வயானைபதமம்மியிட்நகைவிளைக்கும்வதனம்போற்றி, கருதுமெனையருளொழுகிவடிந்திட்வேநோக்குமிருகடைக்கண்போற்றி, யரிபிரமர்கண்கலக்கமகற்றுதுமென்றபையவரமருள்கைபோற்றி, குருதியெழுவேற்கரத்தாய்பரங்கிரியிலிருந்தமணக்கோலம்போற்றி. (சுக)

மன்னியமின்னெழுசெக்கர்வான்போலும்பொற்புரிநூன் மார்பம்போற்றி, கன்னிழைததமணிமகரகுண்டலங்களிலங்கியிடுங்காதுபோற்றி, வன்னமெழுங்கோடிசூரியர்களெனமுடிகவிழ்த்தமகுடம்போற்றி, கொன்னவிலும்வேலணிவோய்பரங்கிரியிலிருந்தமணக்கோலம்போற்றி. (சுஉ)

ஆருயிரேபுத்தமுதேயரசேகண்மணியேயென்றழைக்குந்தோறும், பாரமுலையுமைமடியிற்பதறிவந்துபாய்ந்தேறும்பதுமம்போற்றி, தானெனவேகுமுகுமெனநறையொழுகுங்கடம்பிருந்தசைலம்போற்றி, கூரியதோர்வேலணிந்தகுமரபரங்கிரியின்மணக்கோலம்போற்றி. (சுங)

மத்தமணிச்சடைப்பரமரெடுத்திறுகத்தழுவியெழின் மடிமேல்வைத்து, முத்தமிட்த்திரும்பியெதிர்தாவியெட்டிக்காட்டியசண்முகங்கள்போற்றி, சித்திரப்பாவெனவடித்ததமிட்குருகிச்சாற்றுதிருச்செவிகள்போற்றி, கொத்திருந்தகடம்பணிவோய்பரங்கிரியிலிருந்தமணக்கோலம்போற்றி. (சுச)

கையிலணிவேல்போற்றிக்கருதிவருமயில்போற்றிக்கனகதண்டைச், செய்யமலரடிபோற்றித்திருச்சேவற்கொடிபோற்றித்திகழுஞ்சோதி, மெய்யிலகுமெழில்போற்றிவிளங்கியசண்முகம்போற்றிமேன்மைபோற்றி, கொய்யுமலர்க்கடம்பணிவோய்பரங்கிரியிலிருந்தமணக்கோலம்போற்றி. (சுரு)

வேறு.

நன்றுநன்றெனவேதிருமுடிதுளக்கிநாரணன்முதலினோர்தம்மைக், குன்றெனத்திரண்டதோளுடைக்குமரகுருபரன் மனமகிழ்ந்தன்பா, லின்றுபோலென்றுந்திருமணக்கோலத்தெழி

ல்விழியருந்திடநீவிர், வென்றிசேர்ந்தப்பரங்கிரியுறைமினெ
ன்றுரைவிளம்பியகாலே. (கூகூ)

வாமமென்புறத்தின்மகவெழிலெடுத்துமடுத்திருவிழியுணத்
தெவிட்டா, தியாமளைபரமனுடல்கள்பூரிக்கவிருந்தனரிடத்து
மாலியானை, மாமுகன்றெய்வயானையுநாணமருவுமென்றோர்
புறத்திருந்து, காமர்பின்னவனைக்கடைக்கணுற்பார்த்துக்களி
த்திடக்குமரன்வீற்றிருந்தான். (கூஎ)

மற்றையவானோர்வயின்வயினிருந்தேமாமகள்வாணியாதியர்
க, ளுற்றகண்ணுற்றுப்பார்த்தபினிமையாவுயர்விழிபெற்றவ
ணிருந்தார், சொற்றதுவிருக்கமானிடத்தொகுதிதூய்தவங்
கோடியாண்டிழைத்துப், பெற்றபேறினர்போலியாவருங்கா
ணப்பிரான்பரங்கிரியில்வீற்றிருந்தான். (கூஅ)

வேறு.

திருப்பரங்கிரியின்காதைசிவாலயமதனிற்பூவின்
மருப்பொழிலதனிற்சோதிமடத்தினிதிரத்தி
லுருப்பொலிதலத்தில்வைகியுரைத்துளோர்விழைந்துகேட்
போர், விருப்பெழுபொருளையெய்திமுடிவினில்வீடுசேர்வார்.

வேறு.

அந்தணாளர்சொல்லாரணமோங்குக
வந்துநீதியைமன்னவர்மன்னுக
யெந்தையாறெழுத்தேபொருளாருக
கந்தவேளடியார்கள்களிக்கவே. (எ0)

பதினோராவது திருக்கலியாணச்சருக்க

முற்றுப் பெற்றது.

ஆகசருக்கம்-கக-க்குக்கூடியதிருவிருத்தம்-ருாஉ0கூ.



திருப்பரங்கிரிப்புராண

முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ நிரம்பவழகிய தேசிகராலே

அருளிச்செய்யப்பட்ட

இந்தத்திருப்பரங்கிரிப்புராணத்தை

கலியுகாதிஸு - சகூஅக - சாலிவாகனஸு கஅளஉ-ல்-நிகழாநின்ற பிரமாதிஸு - தை மாதம்-மீசஉ - சோமவாரம் சதுர்த்தசிதிதி-உக-சாரு, புனர்பூசநக்ஷத்திரம்நாழிகை-உஅ உசா,வியதிபாதயோகம் நாழிகை - மீ- உகூ, வணசிகரணநாழிகை-உக-ச, இவைகள் கூடியவிச்சுபதினத்தில்-லா-பருத்திக்கால்மிராசு-வேங்கடாசல முதலியாரவர்கள் - கோவிலடி-கைலையப்ப முதலியா ரவர்கள் - ஷையூர் சொக்கலிங்க முதலியாரவர்கள் கனிஷ்டர்-கந்தசாமிமுதலியாரவர்களாகிய இம்மூவர்களின்வேண்டுகோளால்மதுரையைச்சார்ந்த திருப்பரங்குன்றம், அருணசலசரணர்குமாரர் நாராயணசரணரால் காணக்கால் இயந்திரசாலையிற்பதிப்பித்து பிரசுரஞ் செய்விக்கப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தல்.



| பக்கம் | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௧௯ | ௩௪ | ௧ | கிழிதக் | கிழிக்க |
| ௨௪ | ௬௫ | ௨ | முன்னுங்கு | முன்னுன்கு |
| ௩௨ | ௩௫ | ௧ | நெறுநய் | நறுநெய் |
| ௩௬ | ௬௧ | ௨ | சூழ்மழை | சூன்மழை |
| ௪௬ | ௫௧ | ௧ | மதங் | மகங் |
| ௪௮ | ௯ | ௪ | கிடைந்து | கிடந்து |
| ௫௫ | ௧௩ | ௪ | விளம்புவார் | விளங்குவார் |
| ௬௨ | ௨௯ | ௨ | தருதிளுந் | தருளுந் |
| ௬௬ | ௧௧ | ௩ | ஞெழு | னெழு |
| ௭௩ | ௧௪ | ௪ | குழநது | குழ்ந்து |
| ௭௫ | ௨௬ | ௩ | அடியாற் | அடியார் |
| ௭௮ | ௨௰ | ௨ | அடைந்தன | அடைந்தவ[ண் |
| ,, | ௨௧ | ௪ | பொருந்தயா | பெருதயா |
| ௭௯ | ௨௪ | ௩ | பாங்கிரி | பரங்கிரி |